For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

செப்டம்பர் 2021 • இதழ் 16



## சுவிசேஷ பணியில் சுதேச இயக்கங்கள்

Evangelism
Ecumenism
Nationalism



SELF
Proclamation
Support
Governance



# ஆசிரியர் சுவடு



**கிறிஸ்துவுக்குள் பிரியமான வரலாற்று பிரியர்களே,**

ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தில் வாழ்த்துக்கள்.

பதினாறாம் நூற்றாண்டில் கிறிஸ்தவ திருச்சபையில் ஏற்பட்ட மறுமலர்ச்சியின் காரணமாக, சுவிசேஷம் உலகமெங்கும் மிக வேகமாக பரவ ஆரம்பித்தது. சுவிசேஷ தாகம் கொண்ட மேலை நாட்டு மக்கள் ஒன்றிணைந்து மிஷனெரி சங்கங்களை உருவாக்கி, மிஷனெரிகளை அனுப்பி நம்மை போன்ற தேசத்து மக்களை கிறிஸ்துவுக்குள்ளாக வழி நடத்தினார்கள். மேலை நாட்டு மிஷனெரி சங்கங்கள் சில ஆண்டுகள் பணி செய்து விட்டு கடந்துச் சென்றார்கள். மேலை நாட்டு மிஷனெரி சங்கங்கள் ஏற்படுத்திய தாக்கத்தின் காரணமாக அநேக சுதேச சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டு அவர்கள் விட்டு சென்ற சுவிசேஷ பணியினைத் தொடர்ந்தார்கள். மேலை நாட்டு மிஷனெரிகள் புக முடியாத பகுதிகளுக்குக் கூட சுதேச மிஷனெரி சங்கங்கள் தங்கள் ஊழியத்தினை செய்தார்கள். சுதேச மிஷனெரி சங்கங்களின் சிறப்பிதழாக இது அமைந்திருக்கின்றது. இந்திய தேசத்தின் பல பகுதிகளில் செயல்பட்ட சுதேசி சங்கங்களின் வரலாற்று குறிப்புகள் அடங்கிய ஒரு பொக்கிஷ பெட்டகமாக இப்பிரதி அமைந்துள்ளது.

அடுத்த மாத இதழின் தலைப்பாக **“மிஷனெரிகளின் கல்விப் பணி”** என்ற தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரைகளை அனுப்ப கேட்டுக் கொள்ளுகின்றேன்.

ஒவ்வொரு மாதமும் இதழினை வெளிக்கொண்டு வருவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு. தேவைகள் சந்திக்கப்பட ஜெபித்துக் கொள்ளுங்கள். நன்கொடைகளை அனுப்ப இதழின் பக்கங்களிலிருக்கும் வங்கிக் கணக்குகளை பயன்படுத்திக்கொள்ளுங்கள். எல்லாவற்றிற்கும் மேலாக நண்பர்களுக்கு இப்புத்தகத்தை அறிமுகப்படுத்தி அவர்களை சந்தாதாரர்களாக்குங்கள். தொடர்ந்து வரலாற்று ஊழியங்களுக்காக ஜெபித்துக் கொள்ளுங்கள்.

மன்னா செல்வகுமார்

கர்த்தர் தாமே உங்கள் அனைவரையும் ஆசீர்வதிப்பாராக.


கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**

**வடிவமைப்பு : சுஜித் ரெக்ஸ்**


மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| ஆண்டு சந்தா | 600 + நன்கொடை |
| ஐந்து வருட சந்தா | 3000 + நன்கொடை |
| தனிப்பிரதி | 60 + நன்கொடை |

**“கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்”**
**மாத ஆய்விதழை**
**நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள**
**G-Pay மூலம் நன்கொடை செலுத்த**
**91767 80001**
**என்ற எண்ணுக்கு செலுத்தவும்**
**காசோலை மற்றும் வரைவோலை செலுத்த**
**‘திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம்’**
**Tinnevelly Christian Historical Society**
**என்ற பெயரில் எடுக்கவும்**

**சந்தாவை எங்கள் வங்கி கணக்கில் செலுத்த**

Bank :- Federal Bank
Name :- Tinnevelly Christian Historical Society
Account number :- 17480200003684
IFSC Code :- FDRL0001748


**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**
**பங்களாச் சுரண்டை-627859,**
**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**
04633 290401

christianhistorical@gmail.com

+91 91767 80001
+91 75388 12218

04633 290401

tchsportal.co.in

# கிறிஸ்தவ சுவிசேஷ சுயவெறுப்பு ஊழியர் சங்கம்




தமிழகத்தின் மற்ற பகுதிகளைக் காட்டிலும் தென் தமிழகம் வெளிநாட்டு அருட்பணியாளர்களின் வரவினால் பெரிதும் ஆசீர்வதிக்கப்பட்ட பகுதி. அக்காலத்தில் திருநெல்வேலி மிஷன்களின் தொட்டில் என்று கூறுமளவிற்கு அநேக திருச்சபைகள், ஆலயங்கள் மற்றும் விசுவாசிகள் என்று புதிய புதிய ஆசீர்வாதங்களைப் பெறத்தொடங்கியது. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பப்பகுதிகளில் வெளிநாட்டு மிஷனெரிகளின் வரவு பெரிதும் குறையத் தொடங்கியது. பதினெட்டாம் நூற்றாண்டு மற்றும் பத்தொன்பதாம் நூற்றாண்டுகளை ஒப்பிடும் பொழுது இருபதாம் நூற்றாண்டில் குறைந்த அளவு வெளிநாட்டு மிஷனெரிகளே இந்தியாவில் ஊழியம் செய்தார்கள்.

முந்திய நூற்றாண்டுகளில் வெளிநாட்டு மிஷனெரிகளின் ஊழியம் தென் தமிழகத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. அநேக சுதேச இயக்கங்கள் வெளிநாட்டு மிஷனெரிகளின் ஊழியத்தின் பலனாய் தோன்ற ஆரம்பித்தது. ஒட்டுமொத்தமாக வெளிநாட்டவர்கள் இந்திய தேசத்தை விட்டு வெளியேறுவதற்கு முன்பாக ஆங்காங்கே சுதேச மிஷனெரி இயக்கங்கள் மற்றும் சங்கங்கள் உருவாக ஆரம்பித்தது. இருபதாம் நூற்றாண்டு இந்திய வரலாற்றில் மிக முக்கியமான நூற்றாண்டு எனலாம். பல அர்ப்பணம் மிகுந்த சுதேச சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்ட ஒரு காலகட்டம் அது.

திருநெல்வேலி மிஷன் வளர்ந்து பெருக பல அயல்நாட்டு மிஷனெரிகள் தங்களை அர்ப்பணித்திருந்தார்கள். உதாரணமாக நாசரேத்தில் பணியாற்றிய கனம், மர்காஷியஸ் ஐயரவர்கள், மெஞ்ஞானபுரத்தில் கனம். ஜாண் தாமஸ் ஐயரவர்கள், இடையன்குடி பகுதியில் பணிசெய்த கனம். ராபர்ட் கால்டுவேல் பேராயர் அவர்கள், நெல்லை அப்போஸ்தலன் என்றழைக்கப்பட்ட கனம் ரேனியஸ் ஐயரவர்கள், வட நெல்லை அப்போஸ்தலர் கனம் ராக்லாண்ட் கிறிஸ்தியாநகரம் மிஷனில் பணியாற்றிய கனம். J. K. பெஸ்ட் ஐயரவர்கள் போன்றோரின் அயராத உழைப்பினால் அநேக மக்கள் கிறிஸ்துவை ஏற்றுகொண்டார்கள். இவர்களின் ஊழியத்தினைத் தொடர்ந்து கிறிஸ்தவர்களை உற்சாகப்படுத்தும்படியாகவும், இன்னும் அநேக ஆத்துமாக்களை ஆதாயம் பண்ணும்படியாகவும் சுதேச இயக்கங்கள் வளர ஆரம்பித்தது. அவ்வாறு இந்திய மண்ணில் திருநெல்வேலி மிஷனில் தோன்றிய ஒரு சில சங்கங்களைக் குறித்து காண்போம்.

### யோசேப்பு சங்கம்

வாலிபர்கள் எதிர்கால திருச்சபையின் தூண்கள் எனப்போற்றப்படுவது எவ்வளவு உண்மை என்பதனை யோசேப்பு சங்கம் நிருபித்தது எனலாம். திருச்சபையில் கிறிஸ்துவை ஏற்றுகொண்ட வாலிபர்களின் ஆவிக்குரிய வாழ்வை கட்டியெழுப்புவதற்காக யோசேப்பு சங்கம் உருவாக்கப்பட்டது. இச்சங்கமானது 1908ஆம் ஆண்டு நாசரேத்தில் கனம். P. ஜாண் ஐயரவர்களால் ஆரம்பிக்கப்பட்டது. இச்சங்கத்தின் பரிபாலகராக மகாகனம் வில்லியம்ஸ் பேராயர் அவர்கள் பொறுப்பு வகித்தார்கள். துணை பரிபாலகராக அந்நேரத்தில் மிஷனெரியாக ஊழியத்தினை நிறைவேற்றி கொண்டிருந்த கனம். C.W. வெஸ்ற்றன் ஐயரவர்கள் செயலாற்றினார்கள். இச்சங்கத்தின் மூலமாக வேதவாசிப்பு, தனி ஜெபம், ஆலய ஒழுங்கு, கிறிஸ்தவ ஐக்கியம், கிறிஸ்தவ நெறி ஒழுக்கம், சுவிசேஷ ஊழிய அர்ப்பணிப்பு போன்ற காரியங்களில் வாலிபர்கள் உற்சாகப்படுத்தப்பட்டார்கள். ஆரம்பிக்கப்பட்ட சில காலங்களுக்குள்ளாக யோசேப்பு சங்கம் பெருமளவில் வளர ஆரம்பித்தது. நாசரேத் சேகர எல்லைகளுக்குள்ளாக மட்டுமல்லாது முதலூர், கிறிஸ்தியாநகரம் போன்ற கிறிஸ்தவர்கள் நிறைந்த பகுதிகளிலும் அறிமுகப்படுத்தப்பட்டது. 1909ம் ஆண்டின் இறுதியில் ஆறு சேகரங்களில் யோசேப்பு சங்கம் செயல்பட்டது. சுமார் 41 கிளைச் சங்கங்களும் உதயமானது. வரலாற்று சுவடுகளில் ஆறு சேகரங்களில் மட்டும் 674 பேர் அங்கத்தினர்களாக இருந்ததாக சான்று உள்ளது. வாலிபர்களின் மத்தியில் ஊழியம் செய்வதற்காக சுதேசி சங்கமாக ஏற்படுத்தப்பட்ட இச்சங்கமானது தனக்கென மிஷனெரிகளையும் ஏற்படுத்தியது. உள்ளூர் வாலிபர்களையே தெரிந்தெடுத்து ஊழியத்தில் வெற்றி கண்டார்கள். திரு சுந்தரம் மற்றும் திரு ஆபிரகாம் ஆகிய இருவரும் மிஷனெரிகளாக சங்கத்தில் பணியாற்றினார்கள். திரு. G. சுந்தரம் என்பார் தன்னை ஊழியத்தில் முழுமையாக இணைத்து பிற்காலங்களில் நாசரேத் தூய யோவான் ஆலயத்தின் உபதேசியாராக நீண்ட காலம் பணியாற்றினார்கள்.

அவர்களின் புகழ் இன்னும் குறையாமல் நாசரேத் மக்களின் மனதில் இருக்கின்றது.

இச்சங்கங்களின் மிஷனெரிகள் அங்கத்தினர்களாக இருந்த வாலிபர்களை சந்தித்து அவர்களுக்கு கூடுகைகளை நடத்தி, உபதேசம் செய்வார்கள். மேலும் சங்கங்கள் இல்லாத இடங்களிலுள்ள வாலிபர்களை சந்தித்து அவர்களுக்கு கூடுகைகளை நடத்தி, புதிய சங்கங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். சுவிசேஷ ஊழியத்தோடு கூட நிறுத்திவிடாமல் பத்திரிக்கை ஊழியத்தினையும் இச்சங்கத்தின் மூலமாக செய்திருக்கிறார்கள். 'வாலிபர் மத்திரன்' என்ற பெயரில் மாதாந்திர பத்திரிக்கை ஒன்றினையும் வெளியிட்டு வாலிபர்களை நல்வழிப்படுத்தியிருக்கிறார்கள்.

கனம் பெஸ்ட் ஐயரவர்கள் ஏற்படுத்திய தாக்கத்தின் தொடர்ச்சியாக கிறிஸ்தியாநகரம் பகுதியில் இவ்வூழியத்தின் பலன் மிக அதிகளவில் செயல்பட ஆரம்பித்தது. 1911ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25ம் தேதி கிறிஸ்தியாநகரத்தில் ஆண்டுவிழா கொண்டாடி சிறப்பித்திருக்கிறார்கள். அந்த விழாவிலே கனம் வெஸ்ற்றன் ஐயரவர்களும் அவர்களோடு கூட இணைந்து ஏழு குருவானவர்களும் பங்குபெற்றிருக்கிறார்கள். அந்த நற்கருணை ஆராதனையில் 80 வாலிபர்கள் பங்குபெற்றிருக்கின்றனர்.

அக்காலத்தில் கிறிஸ்தியாநகரம் சேகரத்தின் ஒரு சபையாக பண்டாரஞ்செட்டிவிளை சபை இருந்தது. 1857ம் ஆண்டிலே இச்சபையின் அஸ்திபாரம் ஏற்படுத்தப்பட்டது எனலாம். பண்டாரஞ்செட்டிவிளையைச் சேர்ந்த திரு சுடலைமாடன் என்பவர் முதல்முதலாக கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு, 1857ம் ஆண்டு ஜூலை மாதம் 7ம் தேதி ஞானமுத்து என்ற பெயரிலே கனம் கென்னெற் ஐயரவர்களிடத்திலே கிறிஸ்தியாநகரம் திருச்சபையிலே ஞானஸ்நானம் பெற்றார். அந்நாள் முதற்கொண்டு பண்டாரஞ்செட்டிவிளை பகுதியிலே சுவிசேஷம் மிக தீவிரமாக பரவ ஆரம்பித்தது.

யோசேப்பு சங்கம் பண்டாரஞ்செட்டிவிளை பகுதியில் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. 7 வாலிபர்கள் மிக உன்னதமான ஊழியத்தினை யோசேப்பு சங்கத்தின் மூலமாக நிறைவேற்றியிருக்கிறார்கள். காலை நேரங்களில் வெற்றிலை கொடிக்கால்களுக்கு தண்ணீர் பாய்ச்சி, வேலைகள் அனைத்தையும் முடித்தப்பிறகு மாலை நேரத்தில் ஆலய ஆராதனைகளில் தவறாது பங்குபெறுவார்கள். ஒவ்வொரு நாளும் கூடி வேத தியானம் செய்து, இரவு 9 வரை ஜெபித்து கடந்து செல்லுவார்களாம். சுற்றுப்புறத்திலுள்ள தங்களுடைய பிற மத நண்பர்களுக்கு சுவிசேஷம் கூறி அவர்களை கிறிஸ்துவுக்குள்ளாக வழி நடத்தியிருக்கிறார்கள்.

**சத்திய நகரம் சுயவெறுப்பு சுவிசேஷ குழு**

பண்டாரஞ்செட்டிவிளையில் கிறிஸ்தவம் பரவ ஆரம்பிக்கவே அநேக மக்கள் கிறிஸ்துவை ஏற்றுகொண்டு புதிய திருச்சபை உடன்குடி மண்ணில் கால் பதிக்க ஆரம்பித்தது. கிறிஸ்தியாநகரம் மற்றும் பண்டாரஞ்செட்டிவிளை ஆகிய இவ்விரண்டும் உடன்குடியில் அமைந்திருக்கும் இரு சேகரங்கள். 1980ம் ஆண்டுக்கு முன்பு வரை இரண்டும் ஒரே சேகரமாக



கிறிஸ்தியாநகரம் சேகரமென்றே இருந்தது. யோசேப்பு சங்கத்தின் மூலமாக கிறிஸ்தவ மார்க்க நெறியில் வளர்ந்த வாலிபர்கள், தங்கள் சுவிசேஷ தாகத்தை விட்டுவிடவில்லை. அதின் முயற்சியாக கிறிஸ்தியாநகரம் சுயவெறுப்பு சுவிசேஷ குழு என்ற பெயரில் ஒரு இயக்கத்தை ஆரம்பித்தார்கள். அதின் மூலமாக சுவிசேஷம் உடன்குடியின்பகுதிகளில்அமைந்திருக்கும்திருச்சபைகளுக்குள்ளாக பரவ ஆரம்பித்தது.

அதே சமயத்தில் பண்டாரஞ்செட்டிவிளையில் சுடலைமுத்து என்ற பெயருடைய ஒருவர் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு, ஞானஸ்நானம் பெற்று சுவிசேஷமுத்துவாக மாறினார். பண்டாரஞ்செட்டிவிளையில் பெரும்பாலும் இந்துமார்க்கத்தை சார்ந்தவர்களாக இருந்தபடியினால், கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட ஒரு கூட்டத்தார் பண்டாரஞ்செட்டிவிளைக்கு அருகே ஒரு இடம் வாங்கி **"சத்திய நகரம்"** என்று பெயர்சூட்டி கிறிஸ்தவர்களின் குடியிருப்பாக மாற்றினார்கள். சத்திய நகரம் உருவாகிய சிறிது காலத்தில் கிறிஸ்தியாநகரத்தில் செயல்பட்டு வந்த கிறிஸ்தியாநகரம் சுயவெறுப்பு சுவிசேஷ குழுவிற்கு தனியாக 1930 அல்லது 1931ம் ஆண்டுகளில், ஜெப அறை ஒன்றினை அமைத்து இன்னும் ஜெபத்தில் பலப்பட துவங்கினார்கள். பண்டாரஞ்செட்டிவிளை மற்றும் கிறிஸ்தியாநகரத்தை சார்ந்தவர்களே பெரும்பாலும் இக்குழுவில் இடம் பெற்றிருந்தார்கள்.

பெரிய யோசேப்பு பிரசங்கியார் என்ற உத்தமர் இதற்கு சத்தியநகரம் சுயவெறுப்பு சுவிசேஷ குழுவிற்கு தலைவராக செயலாற்றினார். இச்சங்கம் ஆரம்பிக்கப்பட்ட நோக்கமாவது, திருச்சபைகளில் ஆவிக்குரிய மறுமலர்ச்சியை ஏற்படுத்த வேண்டும், கிறிஸ்துவை அறியாதவர்களுக்கு கிறிஸ்துவை சுவிசேஷமாக அறிவிக்க வேண்டும் என்பதே ஆகும். இக்குழுவில் உறுப்பினராக இருப்பவர்கள் ஞாயிற்றுக்கிழமைகளில் நடைபெறும் ஊழியத்திற்காக வியாழக்கிழமைகளில் கூடி ஜெபிப்பார்களாம். ஒவ்வொரு புதன்கிழமையும் மாலை 6 மணிக்கு சங்கத்தில் உறுப்பினர்களாக இருப்பவர்களுக்கென்று சிறப்பு ஜெபம் நடைபெறும். ஜெபத்திற்கு தாமதமாக வருவார்களென்றால் எந்த உறுப்பினராக இருந்தாலும் சரி, எத்தனை வயதுடையவராக இருந்தாலும் சரி தோப்புக்கரணம் போட்ட பிறகே ஜெப அறைக்குள் அனுமதிக்கப்படுவார். கூடுகை நடக்கும் போது சிறு பிள்ளைகள் பேசக்கூடாது. சிறுபிள்ளைகள் ஏதாகிலும் காரியங்களுக்காக அழுவார்களென்றால் உடனடியாக அவர்களை வெளியே அழைத்துச் சென்றுவிட வேண்டும். பெரிய பிரசங்கியார் அந்த விஷயத்தில் மிக கண்டிப்போடு கூட இருந்திருக்கிறார்கள். அத்தனை கட்டுக்கோப்புடனும், கண்டிப்புடனும் நடத்தப்பட்டிருக்கிறது. சனிக்கிழமை இரவு நேரங்களில் ஆலய ஆராதனை நிறைபெற்றவுடன் ஜெப அறையில் கூட்டம் ஆரம்பமாகும், இரவு ஆரம்பிக்கின்ற கூட்டம் சில வேளைகளில் நடு இரவுவரைக்கும் கூட செல்லுமாம். பக்கத்துகிராமங்களிலுமிருந்து அநேகர் வந்து இக்கூட்டங்களில் பங்குப்பெறுவார்கள். இரவு வீடு திரும்பமுடியாதவர்கள் ஜெப அறையில் தங்கிவிட்டு அடுத்த நாள் அதிகாலையில் எழுந்து தங்கள் ஊர் திரும்புவார்கள். ஒவ்வொரு ஞாயிற்றுகிழமையும் அருகான கிராமத்தில் சென்று ஆலய ஆராதனைகளில் செய்தி கொடுத்துவிட்டு அன்று மாலை அந்த கிராமத்தில் சுவிசேஷ ஊழியம் செய்துவிட்டு திரும்புவார்கள். அக்காலத்தில், ஊழியத்திற்கு செல்லுமிடத்தில் காபி கூட வாங்கிக் குடிக்கக் கூடாது என்பது மிக கண்டிப்பான கட்டளையாகும். செல்லவிருக்கும் கிராமம் நெடுந்தூரமாக இருந்தால் முந்திய நாளே சென்று தங்கிவிடுவார்கள். எந்த கிராமத்திற்குச் சென்றாலும் நடந்தே சென்று ஊழியத்தினை நிறைவேற்றியிருக்கிறார்கள்.

திருச்சபைகளில் ஆவிக்குரிய எழுச்சியை உண்டுபண்ணும் பொருட்டு பல கன்வென்ஷன் கூட்டங்களை நடத்தியுள்ளார்கள். குறிப்பாக கேரளாவைச் சேர்ந்த திரு. கொச்சுக்குஞ்சு அவர்களைக் கொண்டு வருடாவருடம் கன்வென்ஷன் நடத்தப்பட்டது. இதன் விளைவாக குடிப்பழக்கத்திற்கு அடிமைப்படுத்தப்பட்டிருந்த அநேகர் விடுதலைப் பெற்றிருக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் ஆலயம் செல்லுவதை அதிகப்படுத்தியிருகிறார்கள். இச்சங்கங்களை சார்ந்தவர்கள் ஊழியத்திற்கு சென்ற இடங்களில் பல அற்புதங்கள் நடைபெற்றிருக்கிறது. ஒரு முறை ஆறுமுகநேரிக்கு அருகாமையிலுள்ள சுப்பிரமணியபுரம் என்ற கிராமத்திற்கு சென்றிருந்த போது, வியாதியஸ்தர்களுக்கு தண்ணீரை ஜெபித்து, அவர்களுக்கு குடிக்க கொடுப்பது வழக்கம். அப்படி ஒரு நாள் ஜெபித்துக் கொடுத்த போது, ஒரு பெண்மணி, வெறும் தண்ணீரை, இரத்தம் என்று ஏமாற்றம் செய்கிறார்கள் என்று கூறி கிண்டல் செய்திருக்கிறார்கள். இந்த வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் தண்ணீரை சுவற்றில் தெளிக்கவே அது இரத்தமாக மாறி வடிந்திருக்கிறது. அன்றைக்கு அக்கிராமத்தில் பெரிய அற்புதம் நடைபெற்றதாக கூறுவார்கள்.

சத்தியநகரம் சுயவெறுப்பு சுவிசேஷ குழுவில் அநேக நீதிமான்கள் இணைந்து ஊழியத்தினை நிறைவேற்றியிருக்கிறார்கள். அவர்களுள் சின்ன யோசேப்பு பிரசங்கியார், சாலமோன் பிரசங்கியார், தாவீது பிரசங்கியார், தங்கையா பிரசங்கியார் ஏசுவடியான் பிரசங்கியார், தேவதாசன் பிரசங்கியார், விண்ணப்பம் சாமுவேல் ஆசிரியர், தவசிமுத்து ஆசிரியர், சுவிக்ஷேர். ஜெயராஜ் போன்றோர் மிக முக்கியமானவர்கள். இன்றும் ஜெப அறையில் ஒவ்வொரு சனிக்கிழமைகளிலும் கூடுகை நடைபெறுகிறது. தற்சமயம் ஓய்வு பெற்ற பொறியாளர் திரு. சுதந்திரன் எபனேசர் அவர்கள் தலைமை பொறுப்பேற்று இச்சங்கத்தை நடத்திவருகிறார்கள்.

சிறு கூட்ட மக்கள் சேர்ந்ததுமே தனிச் சபைகளாக மாறும் இக்காலத்தில், உன்னதமான ஊழியத்தினை திருச்சபையில் மறுமலர்ச்சியை தங்கள் ஜெபத்தினாலும், உபவாசத்தினாலும், ஊழியத்தினாலும் ஏற்படவேண்டுமென்ற நல்லெண்ணத்தோடு அவர்கள் நிறைவேற்றிய ஊழியம் வீண்போகவில்லை. இன்றைக்கு சத்தியநகரம் பகுதியில் அது ஜெப அறையாகவே இருந்து ஜெபம் நடைபெற்று கொண்டிருக்கிறது. அன்றைக்கு அவர்கள் விதைத்த சுவிசேஷ விதை இன்றைக்கு திருச்சபையில் ஆவிக்குரிய வளர்ச்சியைக் கொடுத்துக்கொண்டிருக்கிறது. வெளிநாட்டு சங்கள்லெல்லாம் குறிப்பிட்ட நாட்களுக்குள்ளாக வந்து, பணி செய்து பிற்காலங்களில் மறைந்துவிட்டது. ஆனால் மண்ணைச் சார்ந்த மக்களால், மண்ணைச் சார்ந்தவர்களுக்காக ஆரம்பிக்கப்பட்ட சுதேசி மிஷனெரி சங்கங்களே இன்றும் திருச்சபைக்கு பெருமளவில் உதவியாக இருக்கின்றது மறுக்கமுடியாத உண்மையாகும்.

**ஜாண் சாமுவேல் H.**
**பண்டாரஞ்செட்டிவிளை**



# நற்செய்திப்பணி இயக்கங்கள்

● ஜே. பா. அலெக்சாந்தர்

முதல் நூற்றாண்டிலேயே நற்செய்தி கொண்டுவரப்பட்ட பெருமை இந்தியாவுக்குள்ளது. பாரம்பரியங்களின் மூலமாக இயேசு கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய புனித தோமாவே நற்செய்தியைக் கொண்டுவந்துள்ளாரென நம்புகிறோம். இதற்கு ஆதாரமான சான்றுகள் கிழக்கு, மேற்கு நாடுகளில் உள்ளன. இதை மறுக்க சரித்திர ரூபகாரமில்லை.

ஆரம்ப நூற்றாண்டுகளில் தென் இந்தியாவிலிருந்த 'சூரியானி கிறிஸ்தவர்கள்' அந்தியோகியா, எருசலேம், பாரசீகம், எகிப்து முதலான இடங்களிலுள்ள சபைகளோடு தொடர்பு கொண்டிருந்தனர்.

16-ஆம் நூற்றாண்டில் உரோமன் கத்தோலிக்க மிஷன்கள் இந்தியாவில் வந்து பணிசெய்து திரளான மக்களைக் கிறிஸ்தவ சமயத்தில் சேர்த்தன.

18-ஆம் நூற்றாண்டில் பிரோட்டஸ்தாந்து மிஷன்கள் வேலைகள் ஆரம்பித்தன இதன் பலனாகவும் இந்தியாவின் பல பகுதிகளில் சபைகள் வளர்ந்தன. 19-ஆம் நூற்றாண்டில் அநேக மிஷன்கள் வந்தன. இவை நாட்டின் பற்பல பகுதிகளில் நற்செய்திப் பணிபுரிந்தன. கல்வித்துறையிலும், மருத்துவதுறையிலும் தொழில் துறையிலும் வேலை செய்யும் பல மிஷன்கள் ஏற்பட்டன. 1935 இறுதியில் இந்தியாவில் மொத்தம் 163 அயல்நாட்டு மிஷன்களும் 15 சுதேச மிஷன்களும் நற்செய்திப் பணியில் ஈடுபட்டிருந்தன. 4.467 அயல்நாட்டுக் கிறிஸ்தவ சமய தூதுவர்கள் பணிசெய்தனர். சுதேச ஊழியர்களின் எண்ணிக்கை பல்லாயிரமாயிருந்தது. தவீர, பாடசாலைகள், கல்லூரிகள், மருத்துவ நிலையங்கள், கைத்தொழிற்சாலைகள் அநேகம் செயல்பட்டன. பிற மதத்தினர், அரசியல் தலைவர்கள் ஆகியோர் இவ்வரிய பணிகளைப் பாராட்டாமல் இருக்கவில்லை.

அனாதை சாலைகள், செவிட்டு ஊமைப் பிள்ளைகள் நிறுவனம், விதவைகள் இல்லம், தொழுநோய் மருத்துவமனைகள், விவசாயப் பள்ளிகள் ஆகிய பல தாபனங்கள் மிஷன்களால் நாட்டு நலனுக்காக நடத்தப்பட்டன.

எண்ணற்ற பணம் இத்தகைய பணிகளுக்காகச் செலவழிக்கப்பட்டன. அயல்நாட்டு சமய தூதுவர்கள் நூற்றுக்கணக்காக இப்பணிகளில் தங்கள் உயிரைத் தியாகம் செய்திருக்கின்றனர். நம் நாடு அயல் நாட்டு மிஷன்களுக்கும் இப்பரோபகாரமான பணிகளுக்கும் பட்டிருக்கும் கடன் இவ்வளவு அவ்வளவென்று மதிப்பிடமுடியாது.

சுதேச கிறிஸ்தவர்களாகிய நாமும் இத்தகைய சீரிய தூதுப் பணியில் ஈடுபட வேண்டியவர்களாயிருக்கிறோம், எனவே, இவ்வறைகூவலுக்கு இணங்கி நம் நாட்டில் பல நற்செய்திப் பிரபல்ய சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றை இங்குக் காண்போம்.

### இந்திய மிஷனரிச் சங்கம் (I.M.S.)

சுதேச மிஷன் சங்கங்களில் இந்திய மிஷனரிச் சங்கம் முக்கியமான ஒன்று. இது திருநெல்வேலி அத்தியட்சாதீனத்தால் நடத்தப்பட்டு வருகின்றது.

இச் சங்கம் 1903 பெப்ருவரி 12-ஆம் நாள் திருநெல்வேலியிலுள்ள பாளையங்கோட்டையில் நிறுவப்பட்டது. 1854-இல் இருந்தே தூதுப் பணியைப் பற்றிய எண்ணம் திருநெல்வேலி கிறிஸ்தவர்களுக்கு உண்டானது. தாமஸ் கெஜட்டன் ராக்லண்ட் முதலாவது சிவகாசியில் தம் மிஷனை ஆரம்பித்தார். இந்த மிஷனரி ஆர்வம் திருநெல்வேலியின் தெற்குப் பகுதியிலும் எழுந்தது. அத்துடன் மறைத்திரு. ஏ. எச். ஆர்டன் எழுதிய அயல் நாட்டு மிஷன்களும் நாட்டு அழைப்பும் என்னும் நூல் 1896-இல் வெளிவந்தது. இது திருநெல்வேலிக் கிறிஸ்தவர்களுக்குள் புத்துணர்வை உருவாக்கினது. 1897-இல் தாமஸ் வாக்கர் செய்த சுற்றுப் பயணங்களினாலும் சேவையினாலும் கிராம சபைகளில் உயிர்மீட்சியும் நற்செய்திப் பணியில் ஆர்வமும் உண்டானது. சுவிசேஷக் குழுக்கள் சபைகளில் ஏற்படுத்தப்படும் காலமாக அக்காலம் விளங்கினது 1899 டிசம்பர் 3-ஆம் நாள் இந்தியாவின் உணர்வுக்காக மன்றாடும் நாளாய் அனுசரிக்கப்பட்டது.

திருநெல்வேலி அசைந்தது. 1900- இல் டக்கர் அம்மாள்புரத்தில் நற்செய்திப் பணியில் ஆர்வம் தீபோல பற்றி எழுந்தது. அவ்வமயம் திரு. வே. சா. அசரியா (பின்பு அத்தியட்சர்) வாலிப கிறிஸ்தவ சங்கத்தின் செயலாளராக இலங்கைக்குச் சென்றிருந்தபொழுது யாழ்ப்பாணம் கிறிஸ்தவர்களின் ஊழிய வாஞ்சையால் கவரப்பட்டு அனல் மூட்டப்பட்டு வந்தார். இவற்றின் விளைவாக 1903 பெப்ருவரி 2-ஆம் நாளில் பல திருநெல்வேலி கிறிஸ்தவர்களின் கனவு நினவாயிற்று. தற்சமயத்தில் திருநெல்வேலி அத்தியட்சாதீன அச்சகம் இருக்கும் கட்டடம் அக் காலத்தில் மிஷன் சத்திரமாக வாலிப கிறிஸ்தவ சங்கத்திற்கு வாடகைக்கு விடப்பட்டிருந்தது. அங்கே எட்டு குருக்களும் 20 அதீட்சதர்களும் கூடி ஜெபத்துடன் இந்திய மிஷனரிச் சங்கத்தை ஆரம்பித்தனர்.

இதன் முதல் செயலாளராகப் பணியாற்றியவர் திரு. வே. சா. அசரியா அவர்கள். திரு அ.சா அப்பாசாமி அதன் முதல் தலைவராகவும், திரு. ஜே. அன்புடையான் அதன் முதல் பொருளாளராகவும் சேவை செய்தனர். நல்லூர், சுரண்டை சுவிசேஷபுரம், பண்ணவிளை, திருநெல்வேலி, மெஞ்ஞானபுரம் முதலிய வட்டாரங்களிலும், திருநெல்வேலி கல்லூரியிலுமாக ஏழு கிளை காரியதரிசிகளும் ஏற்படுத்தப்பட்டனர்.

இச் சங்கத்தின் முக்கிய நோக்கம் இந்திய சபையில் மிஷனரி ஆவியை நம் சொந்த முயற்சிகளினால் வளரச் செய்ய வேண்டுமென்பதும், நற்செய்தியை இந்தியாவிலும் இதர நாடுகளிலும் கூறி அறிவிக்கவேண்டுமென்பதுமாகும்.

ஆரம்பத்தில் இச் சங்கத்திற்குப் பல இடையூறுகள் இருந்தன. அவற்றில் பிரதானமானது பணப்பிரச்சனை. அந்நிய நாட்டு உதவியை நாடாமல் சுய ஆதரவில் இச்சங்கத்தை நடத்த முயற்சித்தவர்களுக்கு இது ஒரு பிரச்சனையாகத்தானிருந்தது. எனினும் அசரியா, அன்புடையான், அப்பாசாமி, ஆர்தர், ஆசீர்வாதம் ஆகியோரின் தளரா முயற்சியால் இடையூறுகள் நீக்கப்பட்டு இச்சங்கம் விருத்தியடைந்தது.

### இந்திய தேசிய மிஷனரிச் சங்கம் (N.M.S.)

இப்பொழுது 'பாரத கிறிஸ்திய சேவக் சமாஜ்' என்று அழைக்கப்படுகிறது. இந்தியாவில் கிறிஸ்தவர்களல்லாதவர்களின் எண்ணிக்கையைக் குறித்து 1903 இல் சில வாலிபர் ஆராய்ச்சி செய்தனர். இந்தியாவிலுள்ள மிஷனரிச் சங்கங்களால் இந்தியாவில் இன்னும் நற்செய்தியைக் கேட்டிராத கோடிக்கணக்கான மக்களுக்கு அறிவிக்க முடியாவிட்டால் இந்திய கிறிஸ்தவர்களாலேயே அது செய்யப்படவேண்டுமென்று உறுதி கொண்டார்கள். ஆகவே, இந்திய புரொட்டஸ்தாந்து கிறிஸ்தவர்கள் ஒன்றுபட்டு உழைக்கக்கூடிய ஒரு மிஷனரிச் சங்கம் ஏற்படுத்தவேண்டுமென்ற எண்ணம் உதயமாயிற்று. மிஷனரிமாரும் இந்திய கிறிஸ்தவத் தலைவர்களும் இதை ஆமோதித்தனர். இந்தியாவிலுள்ள பிரதான மிஷன் இடங்களைச் சந்தித்து நம் நாட்டில் நற்செய்திப் பணி புரிவதின் பொறுப்பை உணர்த்த ஆட்கள் அனுப்பப்பட்டனர். இதில் ஆர்வமுள்ளவர்கள் செராம்பூரில் 1905 டிசம்பர் 24-28 வரை அழைப்பு கொடுக்கப்பட்டது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் பின்வரும் பதினாறு பிரதிநிதிகள் வந்தனர்: வே சா அசரியா (திருநெல்வேலி), ஜான் ரஞ்சன் பானர்ஜி (ஹக்ளி), ஆ. சௌபர்மா (ஷிட்டாம் பர், அஸ்ஸாம்), பி. ஆல்விஸ் (இலங்கை), ஜீ. ஷெர்வூட் எடி (மதுரை), குலான் மாசிஹி (ஐக்கிய மாகாணம்), ஹென்ஸ்மேன் (யாழ்ப்பாணம்), வி கர்மார்கர் (அகமத் நகர்). நி. ச. முக்கர்ஜி (அலகாபாத்), க. தி. பால் (சேலம்), சி. ரத்னவேல் (சிராஜாபீன். லாகூர்). பி. எஸ். சர்க்கார் (ரங்கூன்), எஸ் என முக்கர்ஜி (டெல்லி). செராம்பூர் கல்லூரியில் இப் பிரதிகள் 1905 கிறிஸ்மஸ் தினத்தில் கூடி இச் சங்கத்தை உருவாக்கினர்.

### இச் சங்கத்தின் நோக்கங்கள் :

1. இந்திய தலைமை, இந்திய பணம், இந்திய முறைகள் இதன் கோட்பாட்டுச் சொற்கள்.
2. மனம் மாறுகிற புறமதத்தினரை அண்மையிலிருக்கும் சபைகளில் சேர்க்கவேண்டும். புதிய பிரிவுகள் ஏற்படுத்தலாகாது.
3. இப்பணி எல்லா இந்திய சபைகளுக்கும் பொதுவானது.
4. வேறு மிஷன்கள் பணிபுரியும் இடங்களில் போட்டியிடலாகாது.

கிறிஸ்தவர்களில் மூன்றில் இரண்டு பகுதி தென் இந்தியாவில் இருக்கிறபடியால் சென்னை இச்சங்கத்தின் தலைமை இடம் ஆக்கப்பட்டது. மேலும் இது பர்மாவுக்கும் இலங்கைக்கும் மத்திய இடம்.

இச் சங்கத்தின் முதல் செயலாளர் திரு. வே. சா. அசரியா அவர்கள், பொருளாளர், திரு. க.தி. பால், தலைவர், ராஜா சர். ஹர்றாம் சிங்.

### நிர்மல் மிஷன்

1915 இல் தென் இந்தியாவிலுள்ள மெதடிஸ்து சபை, தென் இந்தியாவில் புதுகளங்களில், இந்திய ஊழியர்களைக் கொண்டும் தென் இந்தியாவிலுள்ள ஆதரவைக் கொண்டும் நற்செய்திப்பணி செய்யத் தீர்மானித்தது.

மெதடிஸ்து சபையின் ஹைதரபாத் மாவட்ட ஆசனாபதி மறைத்திரு C. W. போஸ்னட் என்பாரின் தூண்டுதலினால் 180 கிராமங்கள் அடங்கிய நிர்மல் தாலுகாவில் ஊழியம் செய்ய முடிவுகட்டப்பட்டது. இவ்வூழியத்தைச் செய்ய திரு. சக்கரம் தானியேல் அவருடைய மனைவியுடன் தெரிந்தெடுக்கப்பட்டார்.

வறுமை நிறைந்த மக்களிடையில் அவர்கள் புரிந்த பணியின் காரணமாக 1917 க்குள் ஐந்து கிராமங்கள் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டன. ஊர் தலைவன் அவர்களை எதிர்த்துத் தனக்கு அதிகாரமுள்ள பத்து கிராமங்களில் அவர்கள் பிரவேசியாதபடி தடுத்தான். அதன் பின் திடீரென அத்தலைவன் நோய்வாய்ப்பட்டான். மரணத்தருவாயிலிருக்கையில் திரு. கிளாமத்து என்னும் ஒரு மருத்துவ சுவிசேஷகர் அவன் மீண்டும் சுகமடைய உதவினார். எதிரிக்குப் பாராட்டின கிறிஸ்தவ அன்பை உணர்ந்த அத் தலைவன் மனம் மாறி தன் விக்கிரகங்களை ஆற்றில் எறிந்துவிட்டு கிறிஸ்தவனானான். இச் செய்கை நற்செய்திப் பணி வெற்றிகரமாக முன்னேற உதவினது. 1997க்குள் ஏழு சபைகள் உண்டாயின.

1941 இல் 8,223 கிறிஸ்தவர்களைக் கொண்ட 59 சபைகள் இருந்தன.

### பாரக்கல் மிஷன்

மத்திய திருவிதாங்கூர் அத்தியட்சாதீனத்தால் இம் மிஷன் 1924இல் ஆரம்பிக்கப்பட்டது. ஹைதராபாத்திலுள்ள கட்றப்பள்ளி, பாரக்கல் முதலிய இடங்களில் அசரியா அத்தியட்சரின் ஆலோசனையால் ஊழியம் செய்யப்பட்டது.

முதலாவதாக 1930இல் நாற்பது பேர் திருமுழுக்குப் பெற்றனர். 1948 இல் பாரக்கல்லுக்கு 5 மைலுக்கப்பாலுள்ள எல்லம்பள்ளி என்னும் கிராமத்திலுள்ள மடிகாக்கள் கிறிஸ்தவ விசுவாசத்தில் போதனை பெற்றுக்கொள்ள விரும்பிக் கேட்டனர். போதனைக்கு ஆள் அனுப்பப்படுமுன்னே சபைக்குச் சந்தா, காணிக்கைகள் கொடுக்க ஆரம்பித்துவிட்டனர்.

அப்பொழுது அங்கே இரண்டு மிஷனரிப் போதகர்களும் 35 கிராம சபைகளில் ஊழியம் செய்யும் 25 ஊழியர்களும் உண்டு. நாகராம் என்னுமிடத்தில் ஒரு ரெட்டி குடும்பத்தில் உள்ளவர்கள் சபையில் சேர ஒப்புக்கொண்டுள்ளனர். உயர்ந்த சாதியினர் என்று எண்ணப்படுகிறவர்கள கிறிஸ்துவைப் பற்றி அறிய அதிக ஆர்வம் கொள்கின்றனர். அதற்காக மிஷனரிமாரைத் தங்கள் இல்லங்களில் வரவேற்கின்றனர்.

## இதர பல மிஷனரி இயக்கங்கள்

**1.வையனாடு மிஷன்:** இவ்வூழியத்தைச் சென்னை மிஷன் போர்டு நடத்தி வருகிறது. மேப்பாடி, மனந்தோடி, கூடலூர், என்னுமிடங்களில் பணி நடத்தப்பட்டது மேம்பாடியும், மனம் தோடியும் வட கேரள அத்தியட்சாதீனத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ளன. கூடலூர் மைசூர் அத்தியட்சாதீனத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

**2.காதரின் லிஸ் தோடர் மிஷன்:** சென்னை மிஷன் போர்டே இம் மிஷனையும் நடத்துகிறது. தோடர் கல்வியில் முன்னேறியிருக்கின்றனர்.

**3.தென் இந்திய கோண்டர் மிஷன்:** C.M.S. மிஷனரி மாரின் சேவையால் 1885 இல் முதல் சபை கோண்டர் மத்தியில் ஆரம்பமானது.

**4. ஆலம்பூர் மிஷன்:** இராயலசீமா அத்தியட்சாதீனம் இம் மிஷனை நடத்தி வருகிறது.

**5. முஸ்லிம்கள் மத்தியில் நற்செய்திப் பணி:** 1895 இல் இந்துஸ்தான் மிஷன் C.M.S.ஆல் ஆரம்பமானது. 1909 இல் C.M.S. ஆஸ்திரேலியன் மிஷனுக்கு இந்துஸ்தான் மிஷனை ஒப்புவித்தது. இங்கே C.M.S. சபை இருக்கிறது. ஒரு பாடசாலையும் உண்டு. நற்செய்தி தொடர்ந்து அறிவிக்கப்பட்டு வருகிறது. மேடக் அத்தியட்சாதீனம் அதை நடத்துகிறது. வாணியம்பாடியில் முஸ்லிம் ஊழியத்திற்கு பயிற்சி அளிக்கப்படுகிறது.

**6.மைசூர் மிஷனரிச் சங்கம்:** 1911 இல் ஆரம்பிக்கப்பட்டது. மைசூருக்கு 36 மைல் தூரத்தில் கஸ்தூரில் பணி செய்து வளர்ந்து வருகிறது.

**7.அடூர் மிஷன்:** மத்திய கேரள அத்தியட்சாதீனம் நடத்தி வருகிறது. 1903-இல் ஆரம்பமானது. 1914-இல் 9 சபைகளும் 321 கிறிஸ்தவர்களும் இருந்தனர்.

**8.தென் திருவிதாங்கூர் சுதேச மிஷனெரிச் சங்கம் (H.M.S.):** 1900- இல் ஆரம்பிக்கப்பட்டு பல சபைகளையும் பாட சாலைகளையும் நடத்தி வருகிறது.

**9.மதுரை நகர மிஷன்:** மதுரையில் City Mission தூதுப் பணியைச் சிறப்படன் செய்கிறது. மாதவபுரம், வேதூர் குப்பம், செய்யூர் (சிங்கல்பட்), செய்யூர் (வட ஆர்காடு) ஆகிய புதிய மிஷன் தளங்களில் ஆரம்பிக்கப்பட்டுள்ளன.

கோவிநூரில் 9 கிராமங்களில் பணி நடக்கிறது. திருவதானையில் 13 கிராமங்களில் நற்செய்திப் பணி நடக்கிறது. பெரியகோட்டையில் ஒரு புது ஆலயம் கட்டப்பட்டுள்ளது. Neighbourhood Evangelism Chittra Festival Hospital சிறை சந்திப்பு ஆகியவை சிறப்புடன் நடத்தப்படுகின்றன.

**10. பரதேச மிஷனெரி ஊழியங்கள்:** தென் இந்திய ஐக்கிய சபை பாப்புவாவில் 1944-இல் ஊழியத்தை ஆரம்பித்தது. பின் தென் இந்திய சபை இதை எடுத்துச் செய்தது. மறைத்திரு. Y. சத்தியா ஜோஸப் முதல் மிஷனெரியாகப் பணி புரிந்தார்.

பல இடையூறுகளினிமித்தம் இப்பணி செய்யப்பட்டு வருகிறது. தென் இந்திய சபையின் எல்லா அத்தியட்சாதீனங்களும் இவ்வூழியத்தை ஆதரிக்கின்றன.

**11. தொழில் துறை நற்செய்திப் பணி** (Industrial Evangelism): சென்னை, கோயம்பத்தூர், மைசூர் முதலிய அத்தியட் சாதீனங்கள் இப்பணியை ஊக்குவித்து வருகின்றன. இதற்குத் தகுந்த பயிற்சி தேவை. தொழிலாளிகளுக்கு நற்செய்தியைக் கொண்டு செல்லுதல் தற்காலத்திற்கேற்ற முறை. இந்தியா தொழிலை வற்புறுத்தும் இக்காலத்தில் இத்துறையில் கூடுதலான கவனம் செலுத்தப்பட வேண்டியது இன்றியமையாதது.

**முடிவுரை:**

கிறிஸ்தவர்கள் இந்திய கிறிஸ்தவ சபை தன் முக்கிய கடமை நற்செய்திப் பணி என்பதை உணருவது அவசியம். தகாத முறைகளில் இப் பணியைச் செய்யாது நம் நாட்டுக்கேற்ற முறைகளை அனுசரித்து கிறிஸ்துவின் அன்பை வெளியிடுவது நமது கடமை. சபை ஒருமைப்பாடு இதற்கு இன்றியமையாதது. கிறிஸ்து அருளிய தூதுப்பணி ஒன்றுபட்ட சபையின் மூலம் செய்யப்படுவதே சாலவும் சிறந்தது. அப்பொழுது தூதுப்பணி சாட்சிப் பணியாக அமைய ஏதுவாகும்.

### துணை நூற்கள்


1. Abraham, Joseph, Fifty Years of I. M. S.
2. Richter, J., History of Mission in India.


இந்தியாவில் தற்கால சமய இயக்கங்கள் புத்தகத்தில் இருந்து எடுத்தது - மன்னா செல்வகுமார்

**நற்செய்தி பணியில் வெற்றியடைய தீட்டும் திட்டங்களில் மிகச் சிறந்த வழி இயேசு காட்டிய வழியே. அது கோதுமை மணிபோல் நிலத்தில் விழுந்து சாவதே**

**- கனம் ராக்லாந்து**





# ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கம்

**I ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கத்தின் உதயம்:**

**1. ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கத்தின் நிறுவினர்:**

ராபர்ட் ஆர்த்திங்டன் ஜூனியர், லீட்ஸ் (England), ஹன்ஸ்லெட் லேனில் 20 மே 1823 இல், ராபர்ட் ஆர்த்திங்டன் மற்றும் மரியா நீ ஜோவிட் ஆகியோரின் நான்கு குழந்தைகளில், ஒரே மகனாகப் பிறந்தார். அவரது தந்தை ஒரு பெரிய மதுக்கடை உரிமையாளராயிருந்தார். அவரது பெற்றோர் இருவரும் லீட்ஸ் நகரின் முன்னணி நபர்களும், நண்பர்கள் சங்கம் (Society of Friends) என்ற இயக்கத்தின் முன்னணி உறுப்பினர்களாகவும் இருந்தனர். ராபர்ட் ஆர்த்திங்டன் ஓர் சிறந்த கல்வி மேதையாய் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் படித்திருந்த போதிலும், அவர் எந்த பட்டமும் பெற்றுக்கொள்ள விருப்ப படவில்லை.

1848 இல், ராபர்ட் ஆர்த்திங்டன் தனது தாயையும், இரண்டு சகோதரிகளையும் பின்தொடர்ந்து, நண்பர்கள் சங்கத்தை விட்டு வெளியேறி, தெற்கு பரேட் பாப்டிஸ்ட் திருச்சபையோடு இணைந்தார். 1864 இல் பெற்றோர் இருவரும் இறந்து போக, தன் தந்தையின் £ 200,000 சொத்தின் ஒரே உரிமையாளர் ஆனார். இப்பெருஞ் செல்வத்தை வைத்து சொந்த தொழிலை துவங்காமல், அச்செல்வத்தை பெரும்பாலும் பிரிட்டிஷ் மற்றும் அமெரிக்க ரயில்வேயில் முதலீடு செய்தார் ராபர்ட் ஆர்த்திங்டன். இம்முதலீடு அவருக்கு இன்னுமதிகமான மிக அதிக செல்வத்தை ஈட்டியது. ராபர்ட் ஆர்த்திங்டன் இச்செல்வத்தைக் கொண்டு மிஷனெரிப்பணிகளை ஆதரித்து அவைகளை வலுப்படுத்த விரும்பினார்.

ராபர்ட் ஆர்த்திங்டன் லண்டனின் பாப்டிஸ்ட் மிஷனெரி சொசைட்டி (BMS') மற்றும் லண்டன் மிஷனெரி சொசைட்டி (LMS') ஆகியவற்றிற்கு பெருமளவில் பணஉதவியளித்தார். அவருடைய பரோபகார செயல்களால், உலகின் பல தொலைதூர பகுதிகளில் சுவிசேஷம் சென்றடைந்தது.

**2. ஆப்பரிக்காவில் ராபர்ட் ஆர்த்திங்டனின் பங்கு:**

ஆப்பிரிக்காவின் சுவிசேஷப்பணிகளில், அவருடைய பங்கு மிகவும் பாராட்டப்படத்தக்கது. 1877 இல், ராபர்ட் ஆர்த்திங்டன் ஆர்த்திங்டன் காங்கோ மிஷனைத் தொடங்க பிஎம்எஸ்ஸுக்கு (BMS) £ 1,000 பங்களித்தார். அவருடைய ஆரம்ப நன்கொடை £4,000 மற்றும் கூடுதல் £ 1,000வும், காங்கோ ஆற்றில் நற்செய்தி பணியை எல்எம்எஸ் (LMS) டாங்கன்யிகா மிஷன் மூலம் முன்னெடுக்க உதவியது. 1884 ஆம் ஆண்டில் கிசங்கனி வரை பணி நீட்டிப்புக்காக பிஎம்எஸ்ஸுக்கு (BMS) மேலும் £ 2,000 கொடுத்தார். 1892 ஆம் ஆண்டில் £10,000 அனுப்பி சுவிசேஷப் பணி நைல் பகுதியை

அடைய செய்தார். உகாண்டாவில் மிஷன் பயணத்தை மேம்படுத்த சர்ச் மிஷனெரி சொசைட்டிக்கு (CMS) £ 5,000 கொடுத்தார்.

**3. இந்தியாவில் ராபர்ட் ஆர்த்திங்டன் டின் பங்கு:**

இந்நிலையில் ஜேம்ஸ் வின்சிஸ்டர் என்ற ஆங்கிலேயன் வடகிழக்கு இந்தியாவில் வாழும் மீசோக்களால் கொல்லப்பட்டதையறிந்து, அப்பழங்குடியினருக்கு, சுவிசேஷத்தை அறிவிக்க மிகவும் பாரப்பட்டார். ஆதலால் இவர்கள் மத்தியில் மிஷனெரிகளை அனுப்ப முடிவு செய்தார். இச்சேவைக்காக 1889 இல் 'ஆர்த்திங்டன் ஆதிவாசி மிஷன்' என்ற இயக்கத்தை நிறுவினார்.

**4. இந்தியாவில் மிஷனெரிகளின் வருகை:**

இதே சமயத்தில், ஜெ. ஹெர்பெர்ட் லொர்ரைன் என்ற ஒரு ஆங்கிலேய வாலிபன், ஜேம்ஸ் வின்சிஸ்டரின் மகளை வடகிழக்கு இந்தியாவில் வாழும் மீசோக்கள் கட த்தின ஒரு சித்திரத்தைப் பார்த்து, 'ஆண்டவரே என்னை இங்கே அனுப்பும்', என்று ஜெபித்தார். இதனைத் தொடர்ந்து, டிசம்பர் 1890 இல், அவர் லண்டன் தபால் அலுவலகத்தில் தன் டெலிகிர்பாஹிஸ்ட் வேலையை ராஜினாமா செய்து, புதிதாக துவங்கப்பட்ட ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கத்துடன் சேர்ந்து, கல்கத்தாவுக்கு கப்பலில் பயணம் செய்தார். அடுத்த ஆண்டு, லோரெய்னின் நண்பர், ஃப்ரெட்ரிக் சாவிட்ஜ் என்ற ஆசிரியரும், அவருடன் இணைந்து கொண்டார்,

திரிபுரா மகாராஜா அவர்களை திரிபுரா வழியாக மீசோரம் நுழைய அனுமதிக்காததால், இவர்கள் மீசோராமிற்குள் நுழைய இரண்டு ஆண்டுகள் காத்திருக்கும் நிலை ஏற்பட்டது. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, மனிதத் தலைவேட்டையாடும் மக்கள் கூட்டம் நிறைந்த பகுதியாய் இவ்விடங்கள் காணப்பட்டதால், இந்தியாவை அப்பொழுது ஆண்டுகொண்டிருந்த பிரிட்டிஷ் அரசாங்கம், இவ்விரண்டு மிஷனெரிகளும் தங்கள் சொந்த ஆபத்தில் ஐஸ்வாலுக்கு பயணம் செய்ய தயக்கத்தோடு அனுமதியளித்தனர்.

உயிர்க்கு மிகவும் ஆபத்துக்கள் நிறைந்த நிலையில், அதிக ஜெபத்தோடு, கிறிஸ்துவில் தங்களை பெலப்படுத்திக் கொண்டு, லோரெய்னும், சாவிட்ஜூம் தங்களை எதிர்நோக்கியிருந்த பயணத்தில், பெரும் சந்தோஷத்தோடு காலெடுத்து வைத்தனர்.

அசாமின் சில்சார் நகரிலிருந்து, மூன்று வாரங்கள் படகு பயணம் மேற்கொண்டு, அடர்ந்த காடுகள் வழியாக பதின்மூன்று மைல் பாதையை கால்நடையாக ஏறி, 1894 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பதினொன்றாம் தேதியில், ஐஸ்வால் வந்தடைந்தனர். இந்த தினத்தை தான் இன்றும் மீசோக்கள், **"சுவிசேஷம் தங்கள் நாட்டில் பிறந்த நாள்"** என்று கொண்டாடுகின்றனர். ஐஸ்வாலிலிருந்த பிரிட்டிஷ் அதிகாரி அவர்களை அன்புடன் வரவேற்று, ' உங்களுக்கு உதவ வேண்டாம்' என்று உத்தரவு எனக்கிருந்தாலும், "நீங்கள் விரும்பும் இடத்திற்கு செல்லுங்கள்" என்று கூறி அவர்களை உற்சாகப்படுத்தினார். இவ் வரவேற்பு, விடாய்த்த பாலைவனத்தில் கிடைத்த தண்ணீரைப்போல இருந்தது. மிஷனெரி இருவரும் நன்றியோடு கர்த்தரை துதித்து முன்னேறினர்.

## II மீசோராமில் ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கத்தின் பங்களிப்பு:

**1.மொழியியல் பணி**

லோரெய்னும், சாவிட்ஜூம் ஒரு கிராமத்தினருகில் கூடாரத்தை அமைத்து, அரிசி மற்றும் காய்கறிகளை விற்க வரும் மீசோக்களிடமிருந்து 'துஹ்லியன்' (Duhlian) பேச்சுவழக்கைக் கற்றுக்கொள்ளத் துவங்கினர். நான்கு ஆண்டுகளுக்குள், இருவரும் மீசோமொழியைக்கற்றுஅதற்குஎழுத்துவடிவத்தைக்கொடுத்தார்கள். மீசோ ஆர்த்தோகிராஃபியை உருவாக்க, அவர்கள் ரோமானிய எழுத்துவடிவத்தைப் பயன்படுத்தினர். இவ்வெழுத்து வடிவங்கள் தெளிவாகவும், கற்க எளிமையாகவும், இருந்தன. எழுத்துக்களை உருவாக்கியவுடனேயே, அவர்கள் எழுத்தறிவு வகுப்புகளையும் துவங்கி, ஒருவருக்கொருவர் கற்பிக்க ஊக்குவித்தனர். விரைவில் அம்மொழியில் ஒரு பாடலை மொழிபெயர்த்து, லூக்கா, யோவான், மற்றும் அப்போஸ்தல நடபடிகள் புஸ்தகத்தையும் மொழிபெயர்த்தனர். மீசோமக்கள் தங்கள் சொந்த மொழிகளில் வேதாகம வசனங்களைக் கேட்டு பிரமிப்படைந்தனர். லோரெய்ன் ஒரு திறமிக்க மொழியியலாளராயிருந்தார்.

மேலும், மீசோ இலக்கணம் மற்றும் மீசோ அகராதியையும் செய்து முடித்தனர். இவையே, பின்னர் மீசோ கல்வியின் அடித்தளமாக மாறியது. இவற்றுடனே அவர்கள் ஒரு மீசோ செய்தித்தாளையும் வெளியிட்டனர்.

**2.எழுத்தறிப்பு பணி**

மொழிபெயர்க்கப்பட்ட வேதாகம பகுதிகளையே உரைகளாகப் பயன்படுத்தி, லோரெய்ன் மற்றும் சாவிட்ஜ் எழுத்துக்களை கற்பிக்க, ஆரம்ப பள்ளியொன்றைத் துவங்கினர். இதுவே மீசோராமில் துவங்கப்பட்ட முதல் பள்ளியாகும், இப்பள்ளி பின்னர் உயர் நிலைப்பள்ளிகளாகவும், மேற் கல்வி நிறுவனங்களாகவும், வளர்ந்தோங்கியது. பல இடங்களிலும் இப்பேற்பட்ட பள்ளிகள் திறக்கப்பட்டன. மீசோ மக்கள் இவர்களை மிகவும் நேசித்து லோரெய்னை 'பு புவாங்கா' என்றும் சாவிட்ஜை 'சப் உபா' என்றும் அழைத்தனர். (இவை இரண்டும் மதிப்பும், பாசமும் மிகுந்த மீசோ பெயர்கள்)

**3.திருச்சபைப் பணி**

லோரெய்னின், ஞாயிறுபள்ளி குழந்தைகளின் பாடல்கள் பல முதியோரை வேதாகம கதைகள் கேட்க ஈர்க்கவே, பெரியவர்களும் வேதத்தை வாசிக்க சிறிய ஞாயிறு பள்ளிகளை உருவாக்கினர். விரைவில் ஒரு சிறிய மூங்கில் தேவாலயத்தைக் மிஷினெரிகள் கட்டியெழுப்பினர். ஞாயிற்றுக்கிழமை ஆராதனைகள் வேத வசனங்கள் கூறுவதற்கும், மீசோ எழுத்துக்களையும், கிறிஸ்தவ பாடல்களைப் கற்கவும் பயன்படுத்தப்பட்டன. மீசோக்கள், பெரிய பெரிய வசனப் பகுதிகளை மனப்பாடம் செய்வதில் பெருமிதம் கொண்டனர். ஒவ்வொரு ஞாயிறும் மக்கள் சுமார் எண்பது வசனங்களை மனனம் செய்தனர்.

முதற்கனிகளாக இரண்டு இளைஞர்கள் இரட்சிக்கப்பட்டார்கள். ஆனால் அவ்விருவருமே இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு இறந்துபோயினர். இவர்களை தொடங்கி, வேறு அநேகர், வேறு பல இயக்கங்களின் முயற்சிகளினால் இரட்சிக்கப்பட்டார்கள்.

## III மீசோராமில் ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கத்தின் நிறைவு:

டிசம்பர் 1897 இல், லோரெய்ன் மற்றும் சாவிட்ஜ் மீசோராமிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று. ஏனென்றால் மீசோரமில் திருச்சபை உருவானதினால், அவ்விடத்தை விட்டு, மிஷனெரிகள் மற்ற இடங்களுக்கு சுவிசேஷத்தை எடுத்துச்செல்ல வேண்டும் என்று ஆர்த்திங்டன் விரும்பினார். அவர் மிஷனெரிப்பணி

நிறுவனமயமாக்குதலை வலுவாக எதிர்த்தார். ஒரு சிறிய கிறிஸ்தவ சபை ஸ்தாபித்த உடன் மிஷனெரிகள் இன்னும் சந்திக்கப் படாத பகுதிகளுக்கு செல்ல வேண்டும் என்று ஆணித்தரமாக நம்பினார்.

மீசோராமில் தொடர்ந்து இருக்க முடியாது என்பதை அறிந்த லோரெய்ன் மற்றும் சாவிட்ஜ், பிரஸ்பைடிரியன் மிஷன் மூலமாகச் மீசோராமில் ஊழியம் செய்ய முற்பட்டனர். அது நிராகரிக்கப்படவே, புதிய ஊழியர்களை மற்ற இயக்கத்திலிருந்து வரவழைத்து, அவர்களுக்கு வேண்டிய ஆதரவைக் கொடுத்துவிட்டு, மீசோராமை விட்டு வெளியேற முடிவு செய்தனர்.

1898 இல், மீசோரம் மீது ஆழ்ந்த அன்பு மற்றும் ஏக்கம் வைத்திருந்த இரண்டு பெரிய சுவிசேஷ முன்னோடிகளான லோரெய்னும், சாவிட்ஜும், சுயநலமின்றி மற்றவர்கள் கைகளில் புதிய மிஷினெரிகளின் கைகளில் ஊழியத்தை ஒப்புவித்து, நான்கு மாதங்கள் தங்கி, அவர்களுக்கு மொழியைக் கற்றுக் கொடுத்து, மீசோராமை விட்டு வெளியேறினர், துவங்கிய பணியை அப்படியே விட்டுச் செல்லவில்லை! இது எவ்வளவு பெரிய ஊழிய முன்மாதிரியல்லவா?

பின்னர் என்ன நடந்தது தெரியுமா? தேவன் இவ்விருவரின் விருப்பங்களை கனப்படுத்தி, வேறொரு திருச்சபையோடு மீசோராமின் தென் பகுதியில் ஊழியத்தை நிறைவேற்ற வாய்ப்புகளை, சில மாதங்களில் இவர்களுக்கு திறந்தருளினார். தேவன் எவ்வளவு கரிசனையுள்ளவர் என்பதைப் பாருங்கள்!

1903 ஆம் ஆண்டில், மீசோ திருச்சபையை சுய ஆதரவு மற்றும் சுய பிரச்சார திருச்சபையாக மாற்ற விரும்புவதாக லோரெய்ன் அறிவித்திருந்தார். இந்த வாஞ்சையை தேவன் அங்கிகரித்தார். இன்று மீசோ திருச்சபை முற்றிலும் உள்நாட்டு கொள்கைகளுடன், உலகமெங்கும் மிஷனெரிப் பணியாளர்களை அனுப்பவதில் உலகிலேயே இரண்டாவது இடத்தை பெற்றுள்ளது. மேலும் மீசோரம் 91.6 சதவிகிதத்துடன் கேரளாவிற்கு அடுத்தபடியாக இந்தியாவில் அதிக எழுத்தறிவு பெற்ற மாநிலமாக திகழ்கிறது. அதன் மாவட்டங்களான சச்சிப் மற்றும் ஐஸ்வால் ஆகியவை இந்தியாவிலேயே அதிக எழுத்தறிவு பெற்ற மாவட்டங்களாக இன்றும் திகழ்கின்றன.

### IV இந்தியாவில் ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கத்தின் வேறுசில பங்களிப்பு:

ராபர்ட் ஆர்த்திங்டன் பின்னர் ஒரிசாவின் கொந்து மக்கள் மீது கவனம் செலுத்தினார். இதன் விளைவாக முழு மக்கள் கூட்டங்கள் கிறிஸ்துவண்டையில் சேர்க்கப்பட்டனர். இதே இயக்கம் 1894 இல் வில்லியம் பெட்டிகிரூவை எடின்பர்க்கிலிருந்து மணிப்பூருக்கு அனுப்பியது. மணிப்பூர் ராஜா அவரை இம்பாலில் உள்ள மெய்தீஸ் (Meitei) மத்தியில் பிரசங்கிக்க தடை விதித்தார். ஆகையால் அவர்கள் அங்கிருந்த தங்குல் நாகா மற்றும் குகிஸ் போன்ற பழங்குடியினரிடையே ஊழியம் செய்து, பலரை கர்த்தருக்குள் வழிநடத்தினர்.

### V ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்க தலைவரின் இறுதி வாழ்க்கை :

ஒரு இயக்கத்தலைவரின் இறுதி வாழ்க்கையும் தாம் நிறுவின இயக்கத்தைப் பற்றி பறைசாற்றும்:

ராபர்ட் ஆர்த்திங்டன் இளங்கலையாகத் தன் தந்தையின் வாழ்க்கை முறையைப் பின்பற்றி, எளிய வாழ்க்கையைத் தழுவி, இங்கிலாந்தின் ஹெடிங்லி எனப்பட்ட ஊரில் ஒரு நிலத்தை வாங்கினார். தனது சொந்த உணவை சமைத்து, ஒரு நாற்காலியில் உறங்கி, பதினேழு ஆண்டுகளாக ஒரு சில ஆடைகளையே பயன்படுத்தி, தனக்குரிய வாரச் செலவை மிகக்குறைவாக மட்டுப்படுத்தி, தேவையில் இருப்போர்க்கு பணத்தினால் உதவிச் செய்தார். இத்தகைய சுயமாக விதிக்கப்பட்ட சிக்கனம் அவருக்கு 'ஹெடிங்லி ஊரின் கஞ்சன்' என்ற புனைப்பெயரைப் பெற்றுத் தந்தது. ஆனால் அவரது கட்டுப்படுத்தப்பட்ட வாழ்க்கையினாலேயே, அவரால் உலகளாவிய கிறிஸ்தவப் பணிகளுக்கு பெரும் தொகையை பங்களிக்க முடிந்தது. தன் இறுதி காலத்திலும், சுமார் ஐந்து மில்லியன் டாலர் மதிப்பிலான தனது சொத்துக்களை ஊழியப்பணிகளுக்கு ராபர்ட் ஆர்த்திங்டன் அனுப்பினார். பரலோகத்தில் இவருக்கு இருக்கும் பிரதிபலன் யாரால் சொல்லமுடியும்!

ராபர்ட் ஆர்த்திங்டன் தனது சொந்த நலசெலவையும் குறைத்து, ஒரு தனிமையான ஒதுங்கிய வாழ்க்கைக்கு தன்னை அர்ப்பணித்ததற்கு காரணம் ஒரு மிஷனெரியின் கடிதமே! அந்த கடிதத்தில் இவ்வாறாக எழுதப்பட்டிருந்ததாம்.

"நான் மீண்டும் இங்கிலாந்தில் இருந்திருந்தால், இயேசு கிறிஸ்துவின் அறிவின் பற்றாக்குறையால் புறஜாதியார் அழிவதைக் காட்டிலும், நான் மகிழ்ச்சியுடன் ஒரு அறையில் வசித்து, தரையை என் படுக்கையாகவும், ஒரு பெட்டியை என் நாற்காலியாகவும், மற்றொரு பெட்டியை என் மேசையாகவும் மாற்றிக்கொள்வேன்." ஆர்த்திங்டன் ஏறக்குறைய இப்படித்தான், தன் வாழ்க்கையை வாழ்ந்து முடித்தார்.

ராபர்ட் ஆர்த்திங்டன் ஜீன் 9, 1900 அன்று தனது கடைசி உயிலை எழுதினார். அவ்வுயிலில் கூட, லூக்கா நற்செய்தி, யோவானின் நற்செய்தி மற்றும் அப்போஸ்தலர் நடபடிகள் மொழிபெயர்க்கப்படாத மொழிகளில் மொழிப்பெயர்க்க தன் சொத்துக்கள் செலவளிப்பதில் முன்னுரிமை கொடுக்கப்பட வேண்டும் என்று எழுதினார்.

ராபர்ட் ஆர்த்திங்டன் ஆர்த்திங்டன் பொதுவாக இரண்டு புனைப்பெயர்களைப் பெற்றார், ஒன்று 'அவர் ஒரு பெரிய மனம் கொண்ட பாப்டிஸ்ட் கோடீஸ்வரர்' மற்றொன்று, "ஹெடிங்லியின் தலைசிறந்த கஞ்சன்".

மீசோ திருச்சபையைக் குறித்து, லோரெய்ன் இவ்வாறாக ஒருமுறை எழுதினார், 'வேல்ஸ் மற்றும் ஆங்கிலேய மிஷனெரிகளின் உழைப்பை தேவன் ஆசீர்வதித்து, ... முற்றிலும் படிப்பறிவு இல்லாதிருந்த மீசோ மக்களை படிப்படியாக, அசாம் மாகாணத்திலேயே மிகவும் நேர்மையான எழுத்தறிவுமிக்க, மிகவும் முற்போக்கான சமூகமாக மாற்றினார்.'

இம்மாபெரும் உருமாற்றத்தில், மற்ற பல இயக்கங்கள், திருச்சபைகளின் பங்கு இருப்பினும், ஆர்த்திங்டன் ஆதிவாசி இயக்கத்தின் பணி மிக முக்கிய பங்கு ஆற்றியிருக்கிறது என்பதை யாராலும் மறுக்கவே முடியாது.


நன்றி:

1. March 2013 அருட்பணி (IEM monthly publication), Pg. 30
2. Strom Donna, Wind through the Bamboo, Pg, 29 - 31
3. Wikipedia.


திருமதி.ஷோபனா நெல்சன்
புதுச்சேரி





# சட்டல் கிறிஸ்தவ ஆசிரமம்

## Sattal Christian Ashram

இந்தியாவில் கிறிஸ்தவர்களின் நம்பிக்கை, அதன் இறையியல், கலை மற்றும் பணிகள் பெருமளவில் மேற்கத்தியமயமாக்கப்பட்டிருந்தது அவ்வித மேற்கத்திய தாக்கத்தினுடைய ஆதிக்கத்தின் கீழ் இருந்த அச்சூழலில், இந்திய கிறிஸ்தவர்கள், தங்களின் கலாச்சாரம் மற்றும் சூழலுடன் தங்களை தொடர்புபடுத்திக்கொள்ள உதவும் நோக்கத்துடன் "**சுதேசமயமாக்கலை**" ஏற்படுத்தலாயினர். அதனை செயல்படுத்தும் முனைப்போடு பல்வேறு சுதேச இயக்கங்கள் தோன்றின. அச்சுதேச இயக்கங்களுள் கிறிஸ்தவ ஆசிரமங்கள் தனிச்சிறப்பானதாகும். அவ்வாறாக தோன்றிய கிறிஸ்தவ ஆசிரம இயக்கங்களுள் சட்டல் கிறிஸ்தவ ஆசிரமம் திருச்சபைக்கு ஆற்றிய பங்களிப்பு திருச்சபையின் வரலாற்றில் தனிச்சிறப்புடையது.

இந்தியக் கிறிஸ்தவர்களிடையே சுதேசமயமாக்கலின் குறிப்பிடத்தக்க தாக்கத்தை ஏற்படுத்தியவர்களுள் E.ஸ்டான்லி ஜோன்ஸ் என்ற மிஷனெரி முக்கியமானவராவார். இவர் இந்தியாவின் பில்லி கிரஹாம் என்று பலராலும் போற்றப்படுகின்றார். இந்தியாவில் மிஷனெரியாக மற்றும் இறையியலாளராக அவர் ஆற்றிய அரும்பணி திருச்சபையின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்திருக்கின்றது. பலராலும் பெரிதும் பாராட்டப்பட்ட இவரது முக்கிய படைப்பான '**The Christ of the Indian Road**' என்ற புத்தகமானது, இந்திய மண்ணில் கிறிஸ்துவை அறிய முனைபவர்களுக்கு வரப்பிரசாதமாகவே அமைகிறது.

திருச்சபை வளர்ச்சிக்கு சுதேச இயக்கங்கள் பெருமளவில் பங்களிக்கும் என்பதை நன்கு அறிந்து தன்னுடைய சுவிசேஷப் பணியை மேற்கொண்டு வந்தார். இந்தியர்கள் தங்களுடைய சொந்த கட்டமைப்பிற்குள் கிறிஸ்துவை காண்பது பெறுவது கிறிஸ்தவத்தை அடுத்த கட்டத்திற்கு கொண்டுசெல்லும் என்று அதனை செயல்படுத்தலாயினார்.

ஆசிரமம் என்ற ஒரு அமைப்பை நிறுவினால் மேற்கத்திய மயமாக்கப்பட்டிருக்கின்ற கிறிஸ்தவத்தை சுதேசமயமாக்குவது பெருமளவில் சாத்தியப்படும் என்றறிந்து சட்டல் கிறிஸ்தவ ஆசிரமம் என்ற ஆசிரமத்தை ஈதல் டர்னர் மற்றும் யோனஸ் சின்ஹா என்பவர்களுடன் சேர்ந்து 1930ல் தொடங்கினார். இந்த ஆசிரமமானது உத்தரகாண்ட் மாநிலத்தில் பீம்தால் நகரில் அமைந்துள்ளது. ஆசிரமத்தின் சுற்றுப்புறச் சூழல் முதலே, இந்தியத்துவத்தைப் பிரதிபலிக்கின்ற வகையில் இந்தியாவில் இயல்பான சூழலான அமைதியான காடுகள், மலை, ஏரிகள் என இயற்கையின் நடுவில் இவ்வாசிரமம் அமையப்பெற்றுள்ளது.

இந்த கிறிஸ்தவ ஆசிரமம் கிறிஸ்துவையும் மற்றும் திருச்சபையையும் மையமாகக் கொண்டு செயல்படுகிறது. மேலும் அனைத்து விதமான மக்களுக்கும் வரவேற்பை அளிக்கிறது. சாதி, மதம், இனம் என்று எந்தவித பாகுபாடும் இல்லாமல் தனது சுதேசமயமாக்கப்பட்ட சுவிசேஷ சேவையை மக்களிடையே அளித்து வருகிறது.

'பல மதங்கள் உள்ளன, ஆனால் ஒரே ஒரு நற்செய்தி மட்டுமே உள்ளது.' என்ற ஸ்டான்லி ஜோன்ஸ் அவர்களின் கூற்றின் அடிப்படையில் ஆசிரமத்தின் அன்றாட நடபடிகள் தொடங்கப்படுகின்றன.

இங்கு பலதரப்பட்ட சமயத்தை சார்ந்த மக்களும் தங்களுடைய சொந்த ஆன்மீகத்தை ஆழமாக அறிந்து கொள்ள வழிவகை செய்யப்படுகிறது. அதன்மூலமாக, கிறிஸ்தவம் அவர்களுக்கு பிரத்தியேகமாக எதனை வழங்குகிறது என்று அவர்களே அறிந்துகொள்ளும் வாய்ப்பும் அளிக்கப்படுகிறது. இந்த இயல்பான தேடலின் மூலமாக வெகு அதிகமான நபர்கள் கிறிஸ்துவின் தனித்தன்மையை அறிந்துகொண்டு திருச்சபையில் இணைக்கப்பட்டுள்ளார்கள். அவ்வாறாக தாங்கள்

ஆசிரமத்தின் மூலமாக அடையப்பெற்ற அறிவொளியை நற்செய்தியாக இந்தியாவிலுள்ள பன்முகத்தன்மை கொண்ட மக்களுக்கும் பறைசாற்றும் விதமாக பிரத்தியேகமான பயிற்சிகள் அளிக்கப்படுகின்றது.

சட்டல் கிறிஸ்தவ ஆசிரமத்தில் ஒவ்வொரு ஆண்டும் முக்கிய நிகழ்வாக மே மற்றும் ஜூன் மாதங்களில் பிரத்தியேகமான செயல்பாடுகள் நடைபெறுகின்றன. அதில் பலதரப்பட்ட இந்தியர்கள் குடும்பமாக ஆசிரமத்தில் தங்கி தங்களுடைய வாழ்க்கையை ஆராய முற்படுகின்றனர். சுதேச முறையில் கிறிஸ்து பிரதிபலிக்கப்படுவதன் விளைவாக பன்முகத்தன்மை கொண்ட மக்களும் எளிதாக கிறிஸ்துவை தொடர்புபடுத்திக்கொள்ள இயலுகிறது. இந்த தொடர்புபடுத்துதலானது, **"கிறிஸ்து அனைவருக்குமானவர்"** என எளிதில் அறிந்துகொள்ள வழிவகுக்கிறது. பல நூற்றாண்டுகளாக திருச்சபையானது துறவற இயக்கத்தால் எவ்வாறாக வளர்த்தெடுக்கப்பட்டதோ, அதே போல இந்தியாவில் உள்ள திருச்சபைகளின் வளர்ச்சியில் சட்டல் கிறிஸ்தவ ஆசிரமத்தின் பங்கு பெருமளவில் உள்ளது என்று வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிட்டிருக்கின்றனர். பலர் கிறிஸ்தவ நற்செய்தியை மறுக்க அல்லது தங்கள் சொந்த நம்பிக்கையை புகழ்ந்து பேச வந்தார்கள் என்றும், ஆனால் அவர்களில் பலர் கிறிஸ்துவின் வாழ்க்கை முறையை ஏற்றுக்கொண்டனர் என்றும் இவ்வாசிரமத்தின் வரலாற்றுப்பக்கங்கள் தெரிவிக்கின்றன.

தற்போதைய சூழலை பார்க்கும்போது சர்வதேச அளவில் கிறிஸ்தவ ஆசிரம இயக்கங்கள் வளர்ந்து பெருகி திருச்சபைக்கு பெருமளவில் பங்களிக்கின்றது. ஆனால் அதற்கெல்லாம் முன்னோடியான சட்டல் கிறிஸ்தவ ஆசிரமமானது பாகுபாடற்ற முறையிலே அனைத்து மக்களையும் தன்னகத்தே ஈர்த்து இன்றும் சிறப்பான வகையில் சுதேச முறையில் தனித்துவமாக கிறிஸ்துவை பறைசாற்றிக்கொண்டிருக்கிறது. இத்தகைய தனித்துவமான பங்களிப்பு இந்தியத் திருச்சபையின் வரலாற்றுலகில் போற்றத்தக்கதாகவே காணப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

**ஜெனோ செல்வகுமார் C, அணைத்தலை**

# சுதேச இயக்கங்களின் முன்னோடிகளுள் தாமஸ் உவாக்கர்..!



பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் CMS மிஷனெரிப் பணியாளராக (கி.பி 1885 ) இந்தியாவிற்கு வந்த தாமஸ் உவாக்கர், பெருகி வந்த இந்தியத் திருச்சபைகள் இந்தியர்களாலேயே சமயப்பணி, நிர்வாகம், கல்வி போன்ற அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள பழக்குவிக்கப்பட வேண்டும் என்ற தெளிந்த சிந்தையோடு அன்றைய திருச்சபைகளுக்குள் தெய்வீக ஒளியை பற்றவைத்தவர்.

இவரது தீர்க்கமான சமயப்பணிகளின் சாரம் அவரது சமக்கால சமயப்பணியாளர்களின் இதயத்தையும் தொற்றிக்கொண்டு செயல்பட தூண்டியது.

கி.பி 1890 ஆம் ஆண்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் இருந்த திருச்சபைகளனைத்தும் ஒருங்கிணைக்கப்பட்டு வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மத்திய சபை மன்றங்களாக்கப்பட்ட நிலையில் வடக்கு மற்றும் தெற்கு சபைமன்றங்களுக்கு தலைவராக உவாக்கர் நியமிக்கப்பட்டார். அப்போது சமயப் போதனை, நிர்வாகம், சமயப்பணிக்கான பயிற்சி போன்ற அனைத்திலும் தனது தனித் திறனை வெளிப்படுத்தி, அன்றைய மிஷனெரிமார்களுக்கிடையே மட்டுமல்லாமல் திருச்சபை மக்களிடையேயும் பெரும் மதிப்பிற்குள்ளாகி உயர்ந்து நின்றார் .

இதன் மூலம் குறுகிய காலத்தில் 1891 முதல் 1897 வரை திருநெல்வேலி திருமண்டலத்தின் மாவட்டக் கவுன்சில் தலைவராக உயர்த்தப்பட்டார்.

அக்காலக்கட்டத்தில் அவர் மேற்கொண்ட திருச்சபைச் சீர்திருத்தங்கள் இன்று வரையிலும் அவ்வப்போது இன்றைய நமது



திருச்சபைகளில் எதிரொலிப்பதை பார்க்க முடிகிறது.

பெயரளவில் கிறித்தவர்களாக இருந்து கொண்டு கிறித்தவத்திற்கு சற்றும் பொருத்தமற்ற செயல்களில் ஈடுபட்டோரை கிறித்தவராகவே அவர் கருதவில்லை.

இந்தியாவில் ஞாயிற்றுக் கிழமைகளில் ஆயிரக்கணக்கான மக்கள் ஆலயங்களுக்கு வந்தாலும் வெறும் எண்ணிக்கையளவில் தான் இருக்கிறார்கள் அவர்களெல்லோரையும் கிறித்தவர்கள் என்று கூறிவிட முடியாது என்று அவர் தம் தாய் நாட்டிற்கு எழுதிய கடிதத்தின் முலம் தெரிய வருகிறது.

திருச்சபைகளுக்குள் கிறித்தவ ஒழுங்கு முறைகளை மீறின திருமண உறவுமுறையில் வாழ்பவர்களையும், மதுபானங்களுக்கு அடிமையாகி ஒழுங்கீன செயல்களில் ஈடுபடுபவர்களையும், சாதி மற்றும் மிஷன் சொத்துக்கள் சம்பந்தப்பட்ட செயல்களில் தவறுகள் இழைப்பவர்களையும் சபை உறுப்பினர் என்ற உரிமையிலிருந்தே நீக்கினார்..( The Centenery History of CMS- p. 244) இதனால் கிறித்தவத்தின் தனித்தன்மையைக் கிறித்தவர்களல்லாதவர்களும் அறிந்து போற்றவும் திருச்சபையினர் ஒழுக்கநெறிகளைப் பின்பற்றி வாழவும் வழி வகுத்தார்.

மிஷனெரிகள் மூலம் இந்தியாவில் ஏற்பட்ட கல்வியறிவினால் மக்களிடையே விழிப்புணர்வும் தேசப்பற்றும் விடுதலை வேட்கையும் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அவற்றை நடுநிலமையான கண்ணோட்டத்தோடு கணித்த தாமஸ் உவாக்கர், சிறந்த அரசியல் தொலை நோக்குப் பார்வையுடையவராகத் திகழ்ந்தார்.

எப்படியும் விரைவில் சுதந்திரத்தை எட்டப் போகும் இந்தியர்கள் கிறித்தவம் அளித்த ஆத்ம விடுதலையை மட்டும் இழந்து விடக் கூடாதென்ற முனைப்பில் பல்வேறு யுக்திகளைத் தமது இறைப்பணியில் செயல்படுத்தினார் தாமஸ் உவாக்கர்.

தாம் பணி செய்த இடங்களில் எல்லாம் இளைஞர்களுக்கு வேதாகம வகுப்புகளையும் சபையை நிர்வகிக்கும் திறனையும் பிரிப்பிராண்டி (வேதாகம) என்ற பள்ளிகளை ஏற்படுத்தி மிகத் தீவிரமாக கற்பித்தார்.

மிஷனெரிப் பணியின் தலையாயக் கடமை தங்கள் சொந்த நாட்டு மக்களிடையே இறைப்பணிக்காக இளம் இந்தியர்களுக்கு பயிற்சி அளிப்பதே என்ற தனது உயரியக் கருத்தை மற்ற மிஷனெரிகளுக்குள்ளும் புகுத்தி அவர்களையும் துரிதப்படுத்தினார்.

தமிழில் பாண்டித்துவம் பெற்றிருந்த உவாக்கர் எவரையும் கவரும் பேச்சாற்றல் மிக்கவர். மதபேதமற்று அனைவரும் இவரது பேச்சில் மனம் இலயித்திருக்கின்றனர்.

கேரளாவில் நடைபெற்ற மாரமன் கனவென்சனில் ஆயிரகணக்கான மக்கள் இவரது போதனைகளைக் கேட்க குழுமியிருக்கின்றனர்.

இவர் கிராமப்புறங்களில் இருந்து சமயப்பணிக்கு ஆர்வமுடைய நடுத்தர வயதுடைய இளம் இந்திய இளைஞர்களைத் தேர்வு செய்து சபை உபதேசிகர்களாகவும் குருமார்களாகவும் பயிற்றுவித்து குருத்துவ அபிஷேகமும் அளித்து திருச்சபைகளில் பணிகளில் அமர்த்தினார். தனது பணிக் காலத்தில் ஐந்து முறை குருத்துவப் பணி பயிற்சி அளித்துள்ளார் (மேலது,ப. 274).

கிராமப்புறங்களில் சமயப்பணி செய்வதென்ற நோக்கில் மாவட்ட கவுன்சிலர் தலைவர் பதவியிலிருந்து விலகி கிரமப்புறங்களில் சமயப்பணிகளோடு சமுதாயப் பணிகளையும் செய்தார். அவர் செய்த சமயப்பணிகளினால் கிராமப்புற சபைகள் தொடர்ந்து எழுச்சிப் பெற்றுக் கொண்டிருந்தன.

குறிப்பாக இந்தியர்களை அவர்கள் நாட்டில் சமயப்பணியில் ஈடுபடுத்தும் முனைப்பிலேயே செயல்பட்டார். ஆங்காங்கே கன்வென்சன் எனப்படும் பெருங்கூட்ட சமயப் போதனைகள் நடத்தி அதன் மூலம் சமயப்பணிகளுக்கு அழைப்பு விடுத்து இளைஞர்களை பயிற்று வித்தவர் இந்த தாமஸ் உவாக்கர்.

1901 ஆம் ஆண்டு டக்கரம்மாள்புரத்தில் முதல் அத்தியட்சாதீன ஆவிக்குரிய கன்வென்ஷன் கூட்டத்தை கனம் எஸ். ஜி. மதுரம் அவர்களின் தலைமையில் உவாக்கர் நடத்தினார்.(ஹென்றி பாக்கியநாதன், இருநூற்றாண்டு சரித்திரம் (ப.16))

இக்கூட்டங்களின் எதிரொலியாக இந்திய இளைஞர்கள் பலர் சமயப்பணிக்கு பேரார்வம் காட்டி முன் வந்தனர். இதனால் **'சுவிசேஷ இயக்கம்'** என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தினார்.

நாளடைவில் இந்த அமைப்பின் வளர்ச்சியே இந்திய மிஷனெரி சங்கம் ( ஐ.எம். எஸ்) என்ற பெரிய மிஷனெரி சங்கமாக வளர்ச்சிப் பெற்றது.

1903 இல் இந்திய மிஷனெரி சங்கம் ஆரம்பிப்பதற்கு ஊக்கமூட்டியது, 1901 ஆம் ஆண்டு உவாக்கர் நடத்திய கன்வென்சன் கூட்டமே காரணம் என்று ஹென்றி பாக்கியநாதன் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

தாமஸ் உவாக்கர் திருநெல்வேலி மாவட்டத்தில் நாங்குநேரி தாலுகாவில் உள்ள டோனாவூரில் பணியாற்றிய போது ஏமி கார்மைக்கேல் என்ற அயர்லாந்து பெண் மிஷனெரி தேர்ந்தெடுத்த தேவதாசிப் பெண்கள் மீட்புப்பணியில் அவருக்கு சிறந்த வழிகாட்டியாக இருந்து 'டோனாவூர் ஐக்கியம்' என்ற அமைப்பை ஏற்படுத்த இவரே பெருங்காரணமாக இருந்தார்.

அவரது 28 ஆண்டு கால இந்திய சமயப்பணியில் கடைசி 15 ஆண்டுகள் கிராமப்புறங்களில் பணியாற்றினார்.

இறுதியாக ஆந்திர மாநிலத்தில் சமயப்பணிக் கென்று மசூலிபட்டணம் சென்றிருந்த அவர் விஷபேதியால் 1912 ல் இந்த மாதம் (ஆகஸட்) 24ஆம் தேதி மரணமடைந்தார். ஆனால் இன்றுவரை அவரது கல்லறை இருக்கும் இடம் யாருக்கும் தெரியவில்லை. அவரது நினைவிடத்தைத் தேடிக்கண்டுபிடிக்க வேண்டியது நமது இந்த சந்ததியினரின் பொறுப்பும் அவரது அரும் பணிகளுக்கு நாம் செய்யும் நன்றி கடனுமாகும்.

**Dr ஜான்சிபால்ராஜ், வன்னியன் குடியிருப்பு.**

**'ஆண்டவர் இயேசுவை அறியாதவர்களுக்கு சுவிசேஷத்தை அறிவிக்கக் கர்த்தர் என்னை தெரிந்து கொண்டார்; என் இரட்சகரின் அழைப்புக்கு கீழ்படிவதே என் கடமை'**

**நெல்லை அப்போஸ்தலர் ரேனியஸ்**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

(வரலாற்று நெடுந்தொடர்–6)

தமிழ்நாட்டில் வெளிவந்த முதல் வரலாற்று நாவல்

அதற்கு மேலும் காட்டில் இருக்க முடியாமல் இதோ வந்து விட்டேன். என்ன இருந்தாலும் துறவி கவலைப்படுவது தவறல்லவா?' என்றார் சந்நியாசி.

'அதில் தவறில்லை. மகான் வித்யாரண்யா ஒரு பெரும் அரசை நிலைநாட்டவில்லையா?' என்று கேட்டார் அரசர் ஆர்வமாக.

'இல்லை. இது அகங்காரம், வீண்மாயை, சுயநலம், தன்னையே ஏமாற்றிக்கொள்வது. இந்த உணர்ச்சிகளை எதிர்க்க வேண்டும். ஆனால் சிலவேளைகளில் நான் பெரிய தியாகம் செய்வது போலவும் எனக்குத் தோன்றுகிறது என்றார் அமைதியாக. சிறிது நேரம் கழித்து இந்தக் குழந்தையின் மழலைப் பேச்சையும் குறும்புகளையும் கண்டு நான் அவளுக்கு அடிமையாகிவிட்டேன். அவளைப் பார்க்கும்போதெல்லாம், துர்ப்பாக்கியவதியான அவள் தாயின் நினைவே வருகிறது. கண்களும் சிரிப்பும் அவளைப்போலவே இருக்கிறது. ரொம்பச் சூட்டிகையாக இருக்கிறாள் ....'பின்னர் எண்ணங்களைக் கட்டுப்படுத்தியவராய் அரசரிடம், 'பிரதாப், நொந்துபோன இந்தக் கிழவனை மதித்து இந்த வேளையில் பார்க்க வந்திருக்கிறாயே' என்றார்.

'நான் தன்னலத்தைக் கருதியே உங்களிடம் வந்திருக்கின்றேன். அலைமோதிக் கொந்தளித்துக் கொண்டிருக்கும் இந்த அரசியல் கடலில் உங்கள் அனுபவத்தாலும் விவேகத்தாலும் அரசுக் கப்பலைச் செலுத்த எனக்கு உதவுவீர்களானால் அது பெரிய தர்மமாகும்' என்றார் அரசர்.

'நான் இங்கே இருக்கும் வரைக்கும் என் ஆலோசனையை உனக்குச் சொல்வதற்கென்ன? ஆனால் இனி தீவிரமாக அரசியலில் கலந்துகொள்ள முடியாது, பிரதாப். வெங்கண்ணா சொல்வதிலிருந்து, நீ பிரெஞ்சியரோடு சேர்ந்து சந்தாசாகிப்பை ஆதரிப்பதா அல்லது ஆங்கிலேயருக்கு உதவி மஹமது அலியை ஆதரிப்பதா என்று தெரியாமல் திகைக்கிறாய் என்று தெரிகிறது. வாக்குறுதிப் பத்திரமும் உன்னைக் குழப்பியிருக்கிறது. எனக்குப் பரங்கி இனத்தவா என்றாலே பிடிக்கவில்லை. கூடுமானவரை அவர்களில் யாரிடமும் தொடர்பு இல்லாமலிருப்பதே நல்லது. ஆனால் நடை முறையில் இனி அப்படி முடியாது என்றே தோன்றுகிறது. ஆகவே அங்கும் இங்கும் காற்றாடியைப்போல் அசையாமல் ஏதாவது ஒரு கொள்கையை வகுத்துக்கொண்டு அதையே கைப்பிடித்து வா. சந்தாசாகிப் நம்மிடம் எப்பொழுதும் பகைமைபூண்டு வந்திருக்கிறான். அவனையும் டூப்ளேயையும் நம்ப முடியாது. இருவருமே பேராசைக்காரா், கொள்கையற்றவர்கள். மஹமது அலி ஆற்காட்டு நவாபின் மகனாதலால், அவனுக்குத்தான் நவாபுரிமை இருக்கிறது. சமீபத்தில் ஆங்கிலேயர் நம்மிடம் சரியாக நடந்து கொள்ள வில்லையெனினும் பிரெஞ்சியரை விட அவர்கள் நம்பத்தகுந்தவர்கள் என்றே கருதுகிறேன். அவர்கள் தளபதிகளும் சிறந்தவர்கள் என்று கேள்விப்பட்டேன். பிரெஞ்சியருக்கு மதவெறி அதிகம், சமய சகிப்பினை கிடையாது. பொதுவாக இதுவரை நாம் ஆங்கிலேயரோடுதான் சற்று அதிகமாக நட்புக் கொண்டு வந்திருக்கிறோம். ஆகையால் நடுநிலைமை வகிக்க முடியாத பட்சத்தில் ஆங்கிலேயருடன் சேர்ந்து உரிமைக்கார நவாபை ஆதரிப்பதே மேல் என்பது எனது கருத்து. ஆனால் அதையும் அளவுடன் தான் செய்யவேண்டும். மிலேச்சர்களுக்கு உதவி செய்யப்போய் நமது பலத்தையே இழந்து விடக்கூடாது. ஏதோ எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன்' என்று முடித்தார்.

வழக்கத்துக்கு விரோதமான இந்த அடக்கம் அமாத்யாவுக்கு ஆச்சரியத்தை அளித்தது. ஆனால் ஒன்றும் பேசவில்லை.

'உங்களுக்கு என் மனமார்ந்த நன்றி. உங்கள் ஆலோசனையையும் ஆசியையும் எனக்கு எப்பொழுதும் தந்து உதவவேண்டும்' என்றார் அரசர்.

மனிதன் என்ன செய்ய முடியும் பிரதாப், மகாதேவன் தான் எல்லாம் அறிந்தவன்; எல்லாம் வல்லவன். அவனிடம் வேண்டிக்கொள். உனக்கும் இந்த நாட்டுக்கும் எல்லா மங்களங்களையும் அருள்வான்' என்றார்.

நான் தினமும் அவனை வணங்கித்தான் வருகிறேன். ஆனால் என் குருதான் எனக்குக் கண்கண்ட தெய்வம். இன்னல்கள் ஏற்படும்பொழுது உங்கள் பாதங்களைத் தான்

தேடுவேன் என்று பதிலளித்தார் அரசர்.

'கடவுள் பக்தி, பெரியவர்களிடம் வினயம், குடிமக்களின் நலத்தைப்பற்றி என்றும் மாறாத விசாரம், அறவொழுக்கத்தில் உறுதி, கருணையுடன் கலந்த நீதியுணர்ச்சி, அயல் நாட்டுக் கொள்கையில் முன்யோசனையுடன் ஜாக்கிரதை, சுயபுத்தி, சொற்புத்தி இவை தான் ஒரு விவேகமான அரசனுக்கு இருக்க வேண்டிய குணங்கள். இவையெல்லாம் அனேகமாக உன்னிடம் இருக்கின்றன. அனுபவமும் காலமும் குறைகளை ஈடுசெய்து விடும். நீ வரியைக் குறைத்திருக்கிறாயென்றும் வசூல் விஷயத்தில் தயவுகாட்டுகிறாய் என்றும் கேள்விப்பட்டேன். அதற்காகச் சிலர் உன்னை வாழ்த்துகிறார்கள், சிலர் கேலி செய்கிறார்கள். பதவியிலிருப்பவர்கள் விதி அதுதான். அதைப்பற்றிக் கவலைப்படாதே. நான் வைத்திருந்த குறைந்தபட்சத் தொகை கஜானாவில் இருந்து வருகிறதென்று நம்புகிறேன்.'

'கஜானா அநேகமாகக் காலியாக இருக்கிறது' என்றார் அமாத்யா.

'ஆங்கிலேயர் சாயாஜியை ஆதரித்துத் தஞ்சை மீது படையெடுத்த போது, குடிமக்களின் தயவையும் நல்லெண்ணத்தையும் சம்பாதிக்கும் பொருட்டு வரிப்பளுவைக் குறைத்தேன். அதன் பின்னும் செலவுகள் ஒன்றன்பின் ஒன்றாய் வந்து சேர்ந்து விட்டன. அதனால் கஜானாத் தொகையை அப்படியே வைத்திருக்க முடியாமல் போயிற்று. உப்பூர் வருமானத்தைக் கொண்டு அறப்பணிகள் செய்யுமாறு தாங்கள் சொல்லியிருந்தீர்கள். அதுவும் செய்ய இயலாமலே போய்விட்டது. அந்த வருமானத்தை நான் கடனாக எடுத்துச் செலவழித்து வந்திருக்கிறேன்' என்று வெட்கத்துடன் அரசர் சொன்னார்.

சில வினாடிகள் ஒரு அமைதி நிலவிற்று. சந்நியாசியின் முகமும் வேறுபட்டது. ஆனால் சில வினாடிகள் தான். திரும்பவும் அமைதியான முகத்துடன், 'உனக்குப் பல தொல்லைகளும் இன்னல்களும் ஏற்பட்டு விட்டன. அதனால் அதைக் கவனிக்க உனக்கு அவகாசம் இல்லாமல் போயிற்று. அரசாங்கப் பணி செய்து தேடிய செல்வத்தைக் கொண்டு தான் அந்தக் கிராமத்தை வாங்கினேன். அதன் வருமானம் உனக்குப் பயன்படுவதானால் அது எனக்கு மகிழ்ச்சியே. நான் உயிருடன் இருக்கும் வரை நீ அதைப் பயன்படுத்தி வரலாம். வசதி ஏற்படும் போது அறப்பணிகள் நிறுவிவிட்டால் போதுமானது' என்றார்.

'நான் அவ்வளவு இழிவானவன் அல்ல; நான் எடுத்துக் கொண்டிருக்கும் ஒவ்வொரு பைசாவையும் திரும்பத் தந்து விடுவேன். அமாத்யா துல்லியமாகக் கணக்கு வைத்துக் கொண்டு வருகிறார். பணக் கஷ்டம் மிகுந்த சமயத்தில் மங்கோஜியும் அமாத்யாவும் அந்த யோசனை சொன்னார்கள். நான் அவர்கள் யோசனையை ஏற்றுக்கொண்டேன். ஆனால் அப்பொழுதே அது எனக்கு அவமானமாகத் தான் தெரிந்தது' என்றார் அரசர்.

'இல்லை அப்படியெல்லாம் நினைக்கவேண்டாம். நான் அந்தச் சந்தர்ப்பத்தில் இருந்திருந்தால் நானே அதைக் கொடுத்திருப்பேன். ஆனால் பிரதாப், ஓர் எச்சரிக்கை. மங்கோஜியிடம் யோசனை கேட்கவேண்டாம். அவர் கொள்கை இல்லாதவர். பேராசை பிடித்தவர். உன் மனச்சான்றுப் படியே எப்போதும் நடந்துகொள்' என்றார் சந்நியாசி.

### பெண்ணினத்தின் பரிந்துரையாளர்

'எதற்காகப் பெண்ணினத்தை அவதூறு செய்கிறார்கள்? ஆண்களெல்லாருமே குணசீலர்கள் என்று சொல்லுவது போல் அல்லவா இருக்கிறது. தந்திரமுள்ள பெண் குயிலைத்தான் இந்தக் கவிஞர் பெண் குலத்துக்கு உதாரணமாகச் சொல்லுகிறார்! அதன் முட்டைகளை அடைகாத்துப் பொரித்து வளர்க்கும் பெண் காகங்களுக்கு அவர்களை ஒப்பிட்டுச் சொன்னாலென்ன? ஆண்களுக்குப் பெண்களைக் குறை சொல்வதே வேலையாகி விட்டது!' என்று ஆத்திரப்பட்டாள் அந்தப் பெண். சாகுந்தலத்தில் வந்திருந்த கீழ்க்காணும் அடிகளே அவளது கோபத்தைக் கிளறிவிட்டிருந்தன:

கற்றுக்கொடாமலே பெண்பாலுக்கு உரிய இத்தகைய தந்திரம், தாழ்ந்த விலங்குகளின் பெண் இனத்தில்கூடக் காணப்பட்டால், பகுத்தறிவுடைய மக்களிடத்தில் இன்னும் எவ்வளவு அதிகமாகக் காணப்படும்! தன் குஞ்சுகள் வானில் பறக்கும் வரையில் குயிற்பெடைகள் வேறு பறவைகளைக்கொண்டு தம் குஞ்சுகளை வளர்த்து வருவது உண்மையன்றோ?

பன்னிரண்டு வயதிருக்கும் அவளுக்கு. வயதுக்கு மீறிய உயரம், ஒல்லியான உடல், மென்மையான முகவெட்டு; இருண்டு சுருண்ட கூந்தல்; விசாலமான கறுத்த பிரகாசமான கண்கள்; வளைந்து செறிந்த கறுத்த புருவங்கள்; அறிவுக்களை சுடர்விடும் முகம். அவள் உடுத்தியிருந்த சரிகையிட்ட நீலப் பட்டு அவள் உடலை நளினமாகத் தழுவி அவள் நிறத்தை எடுத்துக்காட்டிற்று. அவள் அதை அணிந்திருந்த முறையிலிருந்து அவளுக்கு இன்னும் மணமாகவில்லை என்றும் தெரிந்தது.

அவள் யாரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டாளோ அவருக்குச் சிரிப்பு வந்திருக்க வேண்டும். ஆதலால் சிறிது நேரம் பதில் எதுவும் வரவில்லை. அவள் மீண்டும் கேள்வியைப் போட்டாள்: 'எதற்காக பாபாஜி, கவிஞர் இப்படிப் பெண்ணினத்தை இழிவாகப் பேசுகிறார்?'

'பெண்கள் தந்திரமானவர்கள் என்று சொல்வதால், ஆண்கள் அப்பாவிகள் என்று ஆகிவிடாது' என்றார் சந்நியாசி,

'இல்லையே, படைப்பிலுள்ள எல்லாப் பெண்ணினத்தையும் அவதூறாகச் சொன்னால் ஆணினம் புனிதமானது என்று சொல்வதாகத் தானே கொள்ளவேண்டும்.'

இது நாடகம் அம்மா,' என்றார். அவருடைய வயோதிக முகம் மகிழ்ச்சிப் புன்னகையால் மலர்ந்திருந்தது. 'நாடகப் பாத்திரங்கள் வாயால் பேசச் செய்வதையெல்லாம் கவிஞருடைய கருத்துக்கள் என்று நினைத்துவிடக்கூடாது' என்றார்.

'ஆனால் இந்தக் கருத்தை அப்படி ஒதுக்கிவிட முடியாது' என்றாள் அந்தப் பெண்.

'அப்படியானால் நீயே அதை உண்மையென்று உறுதிப்படுத்துவதாகிறது! வயது கொஞ்சமானாலும் அறிவு கூர்மையாக இருக்கிறது உனக்கு. கவிஞர் சொல்வது உனக்குப் பொருத்தமாக இருப்பதால் தான் உனக்கு ஆத்திரம் வருகிறதோ என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது!'

'ஐயோ! பாபாஜி இது பெரிய அநியாயம். ஏன் இப்படிப் பெண்களைப் பழிக்கிறார்கள் என்று சொல்லுங்களேன். காளி தாசர் மட்டுமல்ல, பர்த்ருஹரியும் நிறைய இப்படி எழுதியிருக்கிறார்.

இவர்கள் யாருமே பெண்களைப் பற்றிக் குறைவாகச் சொல்ல வாய்ப்புக் கிடைத்தால் அதை விடுவதில்லை என்று வாதிட்டாள் அச்சிறுபெண்.

சந்நியாசி உள்ளுக்குள் சிரித்துக்கொண்டார். ஆனால் முகத்தைச் சிரத்தையுடன் வைத்துக்கொண்டு, 'ஆண்கள் தங்கள் அனுபவத்தில் அப்படிக் கண்டிருக்கலாம், அம்மா. பெண் எப்படியும் ஆணை ஏமாற்றிவிடுகிறாள்; எழுத்தறிவில்லாத மூடப் பெண்கள் எத்தனையோ பேர் தங்கள் அறிவாளிக் கணவர்களை ஆட்டிவைக்கிறார்கள் அல்லவா? பெண் எப்பொழுதுமே ஆணைத் தவறு செய்யத் தூண்டுபவளாகவே இருக்கிறாள். ஆதிமனிதனை ஆதிப்பெண் கடவுளுக்கு விரோதமாகப் பாவஞ் செய்யுமாறு ஆசை காட்டித் தூண்டியதால் தான் உலகத்தில் மரணமும் எல்லாத் துன்பங்களும் வரக் காரணமாயிற்று என்று யூதர்கள் சொல்லுகிறார்கள்.'

'பெரிய மூடக் கதையாக அல்லவா இருக்கிறது' என்றாள் அச் சிறுபெண். இந்தக் கதை கடவுளை முன்யோசனையும் சக்தியும் இல்லாதவராக அல்லவா ஆக்கிவிடுகிறது! அறிவுடையோர் யாராவது இந்தக் கதையை நம்புவார்களா?'

'கோடிக்கணக்கான நாகரிக மக்கள் இன்றும் அதை நம்புகிறார்கள்.' 'நாமெல்லாரும் பழக்கத்துக்கும் பாரம்பரியத்துக்கும் அடிமைப்பட்டவர்கள்' என்று நீங்கள் சொல்வது உண்மையென்று இதிலிருந்து தெரிகிறது. ஆமாம், பெண்தான் ஆணின் அழிவுக்குக் காரணம் என்று சொன்னீர்களே, அது எப்படி உண்மையாகும்?'

'ஏன் சீதைதானே ராமனின் துன்பங்களுக்கெல்லாம் காரணம். வனவாசத்திலும், பின் அவனுக்குப் பட்டாபிஷேகம் ஆகும் வரையிலும் அவனுக்கு ஏற்பட்ட இன்னல்கள் அனைத்தும் அவளால் தான். ஒரு பாவமுமறியாத ஆயிரக்கணக்கான மக்கள் மடியக் காரணமாயிருந்த குருக்ஷேத்திரத்துக்குக் காரணம் திரௌபதிதானே?'

'பாபாஜி! இன்று உங்கள் உதாரணங்கள் ரொம்பப் பலவீனமானவை. நல்ல காலம், இப்பொழுதெல்லாம் ராமர் சீதையைத் துன்புறுத்தியமாதிரி எந்தக் கணவனும் மனைவியைத் துன்புறுத்துகிறதில்லை. சீதை பவித்திரமானவள். அவள் செய்த குற்றமெல்லாம் ராமர் மீது அன்பு செலுத்தியது தான். அவரோ அவளிடம் அநியாயமாகவும் இழிவான முறையிலும் நடந்துகொண்டார். சீதை தந்திரசாலி என்று யாரும் சொல்ல முடியாது. அவள் எளிமைக் குணம் படைத்தவள். சொல்லப்போனால் அந்தக் குணத்தால் தான் அவள் வாழ்க்கையில் அவதிப்பட்டாள். திரௌபதி விஷயம் வேறு. அவள் கணவன்மார் வீரர்கள் என்று புகழ் வாங்கியிருந்தது தான் மிச்சம். அவர்களைவிட அவளுக்குத்தான் தன்மான உணர்ச்சி அதிகமாக இருந்தது. அவர்கள் தங்கள் கடமையைக் கண்ணியமாகச் செய்து வர அவள் தான் சதா அவர்களைத் தூண்டவேண்டியதிருந்தது. பாண்டவர்களைப் போல் எளிமையாய் இருப்பதைவிட திரௌபதியைப்போல் தந்திரமாக இருப்பதையே நான் விரும்புவேன்!'

'வயதுக்கு மீறிய அறிவு அம்மா, உனக்கு' என்றார் சந்நியாசி. அவள் முகத்தையே வாஞ்சையுடன் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, 'உனக்குத் தகுந்த கணவனை எப்படிக் கண்டுபிடிக்கப்போகிறேன்' என்பது தான் என் கவலையெல்லாம். உன் அன்பைக் கவர்ந்து உன்னைப் போற்றி வைத்துக் கொள்ளக்கூடியவன் பெரிய அதிருஷ்டசாலி. ஆனால், பாயீ, ஒரு விஷயத்தில் உன்னை எச்சரிக்கவேண்டும். இந்தப் புதுமைக் கருத்துக்களும் வாதங்களும் உன் கிழட்டுத் தாத்தாவிடம் சரியாய்ப் போய்விடும். ஆனால் கணவனும், புக்ககத்துக்காரர்களும் இதையெல்லாம் சகித்துக்கொள்ளமாட்டார்கள். இனி மேல் நாவை அடக்கிக் கவனமாகப் பேசக் கற்றுக்கொள்ள வேணும் அம்மா' என்றார்.

கல்யாணம் ஆனதும் ஊமையாகிவிட வேண்டுமோ?' என்றாள் அப்பெண் போக்கிரித்தனமாகச் சிரித்துக்கொண்டு.

'ஒரு நாட்டுப்பெண்ணுக்கு எந்த விஷயத்தைப் பற்றியும் சொந்தமாகக் கருத்துக்கள் இருக்கக்கூடாது. இருந்தாலும் அவற்றைப் பெரியவர்களிடம் வெளிப்படையாகச் சொல்லவோ அவற்றைப்பற்றி வாதம் செய்யவோ கூடாது. உனக்கு உலகம் சரியாகத் தெரியாது, அம்மா. ஊரைவிட்டு ஒதுங்கிய இந்தத் தோட்ட வீட்டில் காட்டுமானைப் போல் சுதந்திரமாக வளர்ந்து விட்டாய். என்னையும் இந்த வயதான மாமியையும் தான் உனக்குப் பழக்கம். உன்னைப்போலொத்த பெண்கள் மற்றப் பிராமணக் குடும்பங்களில் எப்படி வளர்கிறார்கள் என்பதே உனக்குத் தெரிந்திருக்கவில்லை. எந்நாளும் நீ இப்படியே இருக்க முடியாது என்பதை நான் கூட சிலவேளைகளில் மறந்தே விடுகிறேன். உன்னை விட இருமடங்கு வயதான சமஸ்கிருதப் புலவர்களுக்குக் கூட உன்னைப் போன்று கூர்மையும் பயிற்சி அறிவும் இருக்காது. ஆனால் உன் வயதில் பாதியே ஆன சிறு பெண்கள் கூட உன்னை விட அதிகமாகக் குடும்பப் பழக்க வழக்கங்களையும் உலக நடப்பையும் தெரிந்து வைத்திருப்பார்கள்' என்பார்.

'ஏன் பாபாஜி நாம் இப்படியே இந்தத் தோட்ட வீட்டில் இருந்து சுகமாகக் காலம் கழிக்க முடியாதா?' என்று கேட்டாள் பேத்தி.

'அப்படிக் கழிக்க முடிந்தால் நன்றாகத்தானிருக்கும்' என்றார் சந்நியாசி பெருமூச்சுவிட்டவண்ணம்.

'ஆனால் அப்படி முடியாதே அம்மா, அது சரியுமல்ல. நான் உனக்குத் தகுந்த கணவனை விரைவாகத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்' என்றார்.

'எனக்கொன்றும் கல்யாணம் வேண்டாம். இப்படியே உங்களோடும் மாமியோடும் இருப்பது தான் எனக்குப் பிடிக்கிறது' என்றாள் பெண்.

சந்நியாசி சிந்தனையுடன் அதெப்படியம்மா? ஒரு பெண் எந்தப் பருவத்திலும் சுதந்திரமாக இருக்க முடியாது. நமது சாஸ்திரங்கள் அதற்கு அனுமதி அளிக்கவில்லை. பார்க்கப்போனால் அது சரிதான் என்று தோன்றுகிறது. அவள் முறையே தந்தை, கணவன், மகன் இவர்கள் ஆதரவிலேயே இருக்க வேண்டியவளாகின்றாள். நாபஜேட் ஸ்திரி ஸ்வதந்திரதம் என்று மனு விதித்திருக்கிறார்' என்றார்.

நீங்கள் என்னுடைய பாட்டனார். அதனால் நான் உங்கள் ஆதரவிலேயே இருந்தால் என்ன? இப்பொழுது நான் சந்தோஷமாக இருக்கிறேனே?' என்றாள்.

நீ இன்னும் சிறு குழந்தை. அதனால் தான் இப்படிப் பேசுகிறாய். என் காலம் வரைக்கும் நீ என்னோடு இருக்கலாம். சரி, ஆனால் நான் சாகாவரம் வாங்கி வந்தவன் இல்லையே. எனக்கோ வயதாகிவிட்டது. தள்ளாமை அதிகமாகிறது. உயிர் மெல்லிய

இழையில் ஊசலாடிக்கொண்டிருக்கிறது. என் காலத்துக்குப் பிறகு கல்யாணமாகாத அழகான இளம் பெண்ணாகிய உன்னை யார் பாதுகாப்பார்கள்? பழங்காலத்தில் சில பெண்கள் திருமணம் வேண்டாமென்று சொல்லிப் பூணூல் அணிந்து தங்கள் காலத்தைப் படிப்பிலும் தியானத்திலும் கழித்தது உண்மை தான். ஆனால் அது அந்தக் காலம். இப்பொழுது காலம் மாறிவிட்டது. ஒவ்வொரு பெண்ணுக்கும் நல்ல பாதுகாவலன் வேணுமம்மா. நான் அமரன் இல்லையே. அதோ தெரியும் அந்த நிலவு இன்று அஸ்தமிக்கும் முன்கூட நான் இறந்து விடலாம்' என்றார் சந்நியாசி.

ஆறிலும் சாவு நூறிலும் சாவு. நான்கூட ஒருவேளை உங்களுக்கு முன் இறந்துவிடலாம். நெல்லும் கோதுமையும் சோளமும் அறுவடை செய்யக் காலம் உண்டு. ஆனால் ஈவிரக்க மற்ற எமனுடைய அரிவாள் மனித உயிர்களை அறுவடை செய்வதற்குக் காலம் இல்லை.

'இப்படி மனம்போனபோக்காகப் பேசாதே பாயி, சாவைப்பற்றி மாத்திரம் என்னிடம் பேசிவிடாதே' என்றார் சந்நியாசி படபடப்பாக.

'ஆண்டவனே! நினைத்தாலே பதறுகிறது. உள்ளே போ அம்மா, தூங்குவதற்கு நேரமாகிவிட்டது. அழகான இளைஞனைக் கனவில் கண்டு காலையில் என்னிடம் சொல்லு. எனக்கு வேலை குறைந்துவிடும்' என்றார் சந்நியாசி.

பாயி, தான் படித்துக் கொண்டிருந்த சாகுந்தலம் பனையோலை ஏடுகளைச் சேர்த்துக் கட்டிக்கொண்டே, 'கண்டிப்பாகக் கல்யாணம் ஆகத்தான் வேண்டுமென்றால் இன்னும் சில வருடங்கள் கழித்துச் செய்துகொள்ளக் கூடாதா? சகுந்தலை ஒன்றும் துஷ்யந்தனை இப்படிச் சிறு வயதில் கல்யாணம் செய்துகொள்ளவில்லை. ஏன் திரௌபதி, தமயந்தி, ருக்மணி, உஷை, மாலதி, சுபத்ரை, சாவித்ரி யாருமே அப்படிச் செய்து கொள்ளவில்லை. நான் படித்த பழைய நூல்களில் எந்தப் பெண்ணுமே சிறுவயதில் திருமணம் செய்ததாகத் தெரியவில்லை .

'சகுந்தலை செய்த மணம் கண்டிக்கத்தக்கது. காளிதாசரும் இரகசிய மணத்தைக் கண்டிக்கவே செய்கிறார். ஆனால் அவர் அவசரக் கல்யாணங்களையும் ஒப்புக்கொள்ளவில்லை. இரண்டு உள்ளங்களும் ஒன்றையொன்று அறியாவிட்டால், அந்த உறவு வெறுப்பில் தான் முடியும் என்று கூறியுள்ளாரே. திருமணத்துக்கு முன் இருதரப்பினரும் நன்கு பழகிப் புரிந்து அன்பு செலுத்தியிருக்கவேண்டும் என்று சொல்லுகிறாரே' என்றாள்.

சந்நிசியாசி சொன்னார், 'காலம் மாறுகிறது பாயி. அதற்கேற்ப பழக்க வழக்கங்களும் மாறுகின்றன. நம்மை வைத்துக் கொண்டு திருவிளையாடல் புரிகின்றானே அந்த மகாதேவனின் திருவுள்ளம் அது. நல்ல வழக்கம் கூட நாட்செல்லச் செல்ல தீமையாகிவிடுகிறது. ஆகவே காலத்துக்கும் சந்தர்ப்பமகளுக்கும் ஏற்றவாறு வழக்கங்களும் மாறிக்கொண்டே வருகின்றன. ஏதோ காரணங்களுக்காக குழந்தை மணம் அவசியமாகி பழக்கத்துக்கும் வந்து விட்டது. வயது வந்த விவாகத்தையும், பெண்கள் மணஞ்செய்து கொள்ளாமல் இருப்பதையும் நமது சாஸ்திரங்கள் தடுக்கவில்லை. ஆனால் பிராமண சமூகத்தில் பெண் கற்பையும், ஜாதி சத்தத்தையும் பாதுகாக்கப் பிற்காலத்தில் இளமை விவாகத்துக்கு நியதி வகுத்தார்கள். உன் தாய் உன் தந்தையைக் கலியாணம் செய்யும்போது அவளுக்கு ஏழு வயது தான். உன் தந்தைக்கோ உனது இப்போதைய வயதைவிடக் குறைவு. இருதரப்பினருடைய இயல்புகள் எப்படி இருந்த போதிலும், திருமண வாழ்க்கை இன்பமாகச் செல்ல நியதிகள் இருக்கின்றன. தன் கணவன் காதலிக்கும் சக்களத்திகளிடமும் அன்பு செலுத்தும்படி ஓர் இந்து மனைவிக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள்' என்றார்.

இது அநியாயம், சுயநலம். நான் ஆண்மகனாக இருந்தால் இதற்காக வெட்கப்பட்டிருப்பேன்' என்றாள் பாயி ஆத்திரமாக. பின் மெல்லிய குரலில், 'தாத்தா, என் அம்மாவும் அப்பாவும் இளமையில் கலியாணஞ் செய்து கொண்டார்களே அவர்கள் சந்தோஷமாக இருந்தார்களா? அவர்களைப் பற்றிப் பின்னால் சொல்லுகிறேன் என்று அடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள். இப்பொழுது கொஞ்சம் சொல்லுங்களேன். மாமி ஏதாவது கொஞ்சம் சொல்லுவாள், ஆனால் அவள் விஷயங்களைக் குழப்பிவிடுகிறாள். சொல்லும் போதே அழுகை வந்துவிடுகிறது. நீங்களாவது சொல்லுங்களேன்' என்று கெஞ்சினாள்.

அதற்குள்ளாக மாமியின் கீச்சுக் குரல் தோட்ட வாசலிலிருந்து கூப்பிடுவது கேட்டது: 'பாயீ! நேரமாகுது உள்ளே வா! வாடைக்காத்திலே இராத்திரி நேரம் தோட்டத்திலே இருக்கப்படாது. உங்க பாபா ஜீக்கு இது தெரியாது?' என்றாள்.

'நான் சொல்லவில்லையா?' என்றார் சந்நியாசி. 'உன் மேலே மழை ஊத்துது. என் மேலேயும் தூவானம் தெறிச்சுடுத்து. இப்போ நல்ல குழந்தையா உள்ளே போய்ப் படுத்துக்கோ. நான் சொன்னதை நினைவிலவச்சு ஒரு நல்ல புருஷனைக் கனவில் கண்டு காலையில் என்னிடம் சொல்லு' என்றார்.

**தொடரும் ...**

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

- தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜீன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1400 க்கு மேற்பட்டவாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.
- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் **'பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்'** என்ற வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் மறுபதிப்பு செய்து

வெளியிடப்பட்டது. மேலும் தற்போது பத்துக்கும் மேற்பட்ட புத்தகங்களை மறுபதிப்பு செய்யும் பணிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.

- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்ப்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.


**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**

**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**

**பங்களாச் சுரண்டை-627859,**

**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**

**04633 290401**

Federal Bank

Tinnevelly Christian Historical Society

Account number : 17480200003684

IFSC Code : FDRL0001748

christianhistorical@gmail.com



**சந்தா விபரங்களுக்கு**

**91767 80001**




WWW.

tchsportal.co.in

## தமிழகத் திருச்சபை வரலாற்றில்

# சுதேச மிஷனரி இயக்கங்கள்



- ஓர் வரலாற்றுக் கண்ணோட்டம்

### தமிழக திருச்சபையின் தொடக்கம் - அருட்சீடர் தூய.தோமாவின் பணி

ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் நேரடி அருட்சீடர் தூய.தோமா கி.பி.52 இல் தமிழ்நாட்டை ஒட்டிய அக்காலம் மலபார் எனப்பட்ட தற்போதைய கேரளாவின் கிராங்கனூருக்கு கடல்வழியாக வந்து சேர்ந்தார். ஏழு திருச்சபைகள் தூய.தோமா அவர்களால் அங்கு நிறுவப்பட்டது. தென்தமிழகத்தில் திருவிதாங்கோடு வடதமிழகத்தில் சென்னையிலுள்ள மயிலாப்பூர், சின்னமலை, பரங்கிமலை ஆகிய இடங்களில் திருச்சபை நிறுவப்பட்டது. கி.பி.72 இல் இவர் இரத்தசாட்சியாக சென்னையில் மரணமடைந்தார்.

### அயல்நாட்டு மிஷனரிகளின் தொடக்க கால வருகை

தூய தோமா அவர்களைத் தொடர்ந்து மேற்கு கடற்கரை ஓரமாக கி.பி.189 இல் வருகை தந்த பண்டைனஸ், கி.பி. 295 இல் வருகை தந்த பாரசீக வளைகுடாவை சார்ந்த பார்சாவிலிருந்து வந்த டேவிட் நான்காம் நூற்றாண்டில் சிரியராகிய சினாய் தாமஸ், மார்ஜோசப் மற்றும் சில போதகர்கள் உடன் கேரளா பகுதிக்கு வந்த 400 சீரிய கிறிஸ்தவர்கள், கி.பி.542 இல் வருகை தந்த யாக்கோபு பாரடை ஆகியோர் மூலம் மேற்கு கடற்கரை ஓரமாக பரப்பப்பட்ட நற்செய்தி தற்போதைய தமிழகத்தின் கன்னியாகுமரி மாவட்டம் வரை பரவி சபைகள் உருவானது.

### தமிழகத்தில் கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனரி சங்கங்கள் மூலம் இன்று வரை தொடரும் மிஷனரிப் பணி

பதினான்காம் நூற்றாண்டில் பிரான்சிஸ்கன் மற்றும் டொமினிக்கன் துறவற சபைகள் நற்செய்தி பணியாற்ற தென்னிந்தியாவிற்கு வந்தனர்.

இயேசு சபை மிஷனரியாக

1542 இல் தூய. சவேரியார் அவருக்குப் பின்
1605 இல் தத்துவப்போதகர். இராபர்ட் டி நொபிலி
1606 இல் போதகர். பெர்னான்டஸ்
1673 இல் தூய.அருளானந்தர்

1711 இல் வீரமாமுனிவர் இவர்களைத் தொடர்ந்து சின்ன சவேரியார் ஜேம்ஸ் தே ரோசி அடிகளார், தந்தை. ட்ரிங்கால் அடிகளார், தந்தை. கௌசானல் அடிகளார் என பலரால் நற்செய்தி அறிவிக்கப்பட்டது.

தென்தமிழகத்தில் இறைபணியாற்ற வந்த இயேசுசபை போதகர் தாத்தாசாமி இலெவே அடிகளார் இந்திய விடுதலைக்குப் பின்னரும் தமது தாய் நாட்டிற்குச் செல்லாமல் இந்தியாவிலேயே தமது ஊழியப்பணியைத் தொடர்ந்தார்.

### இந்திய விடுதலைக்குப் பின்பான மிஷனரிப் பணி

தமிழகத்தில் பணிசெய்த சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனரி இயக்கங்கள் (SPG, LMS, CMS, மெத்தடிஸ்ட், அமெரிக்கன் மதுரை மிஷன், டேனிஷ், ஸ்வீடிஷ், பின்னிஷ், லைப்சிக், ஜெர்மானிய லூத்தரன் மிஷனரி இயக்கங்கள் உட்பட) இந்திய விடுதலையைத் தொடர்ந்து தங்கள் பணிகளை படிப்படியாக முழுமையாக நிறுத்திக் கொண்டன.

சீர்திருத்த கிறிஸ்தவ அயல்நாட்டு மிஷனரிமார் தங்கள் தாய் நாட்டிற்கு சென்று விட்டனர். ஆனால் அதே வேளையில் தமிழகத்தில் மிஷனரிப் பணி செய்து வந்த கத்தோலிக்க மிஷனரி இயக்கமான இயேசு சபை மிஷனரிகள் இந்திய விடுதலைக்குப் பின்பும் தங்கள் தாய் நாட்டிற்கு செல்லாமல் தமிழ்நாட்டிலேயே தங்கள் மிஷனரிப் பணிகளை தொடர்ந்தார்கள் அவர்களைத் தொடர்ந்து அவர்களால் உருவாக்கப்பட்ட இயேசு சபை போதகர்கள் இயேசு சபை (SJ) பெயராலும், இயேசு சபையில் இருந்து தொடங்கப்பட்ட துறவற

மிஷனரி இயக்கமான திரு இருதய சகோதர (SHJ) சபையின் பெயராலும் தொடர்ந்து மிஷனரி பணிகளைச் செய்து வருகிறார்கள் ஆதலால் தமிழ்நாட்டில் கத்தோலிக்க கிறிஸ்தவத்தில் சுதேச மிஷனரி இயக்கங்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது.

1975 க்கு முன் உருவான சீர்திருத்த கிறிஸ்தவ சுதேச மிஷனரி இயக்கங்களை குறித்து விரிவாக காண்போம்

## தமிழகத்தில் சீர்திருத்த கிறிஸ்தவ சுதேச மிஷனரி இயக்கங்கள்

### 1. இந்திய மிஷனரி சங்கம் (IMS)

தமிழகத்தில் எழும்பிய சீர்திருத்த கிறிஸ்தவ முதல் சுதேச மிஷனரி இயக்கமே IMS. எனும் இந்திய மிஷனரி சங்கம். தமிழ்நாட்டில் முதன்முதலாக சுதேச மிஷனரி இயக்கம் உருவாவதற்கு காரணமாக அமைந்தது கெஷ்விக் கன்வென்ஷன் கூட்டம் ஆகும்.1899 இல் லண்டன் நகர மேயர் ஐயர் கெஷ்விக் கன்வென்ஷன் கூட்ட முறைகளை எடுத்துக்காட்டிச் சென்றார். வருங்காலத்தில் சுதேச மக்களே இக்கன்வென்ஷன் கூட்டத்தை நடத்த வேண்டும் என அவர் அறைகூவல் விடுத்தார். 1900 முதல் இக்கூட்டம் டக்கரம்மாள்புரத்தில் கனம். உவாக்கர் ஐயரவர்கள் தலைமையில் நடைபெறலாயிற்று. இக்கூட்டமே சுதேச மிஷினரி இயக்கம் உருவாக மூல காரணமாய் அமைந்தது.

1912 ஆம் ஆண்டு YMCA சார்பாக திரு.V.S. அசரியா அவர்கள் இலங்கையைச் சார்ந்த யாழ்ப்பாணம் சென்று வந்தார்கள் யாழ்ப்பாண மக்கள் சுவிசேஷ வாஞ்சை கொண்டவர்களாக கிழக்கு கடற்கரையோரம் இருந்த தொண்டி என்ற இடத்தில் நற்செய்தி அறிவித்து வந்தனர் இதை அறிந்த திரு.V.S.அசரியா அவர்கள் இந்தியாவிலும் உள்நாட்டு மக்களை கொண்டு மிஷனரி சங்கம் நிறுவ வேண்டும் என்ற விருப்பத்தை கொண்டிருந்தார். 12.02.1903 இல் சுவிசேஷ ஊழிய வாஞ்சை கொண்ட 8 குருமார் மற்றும் 20 சபையார் பாளை மிஷன் சத்திரத்தில் ஒன்று கூடினர். அவர்களில் முக்கியமான சிலரின் பெயர்கள் பின்வருமாறு

திரு.J.M. தேவதாசன், திரு. G.J. ஆர்தர், திரு V. J. டேர், திரு.J. அன்புடையான், திரு .J D.ஆரோன், திரு.V.S. அசரியா

**'இந்தியாவிலும் மற்றும் பிற தேசங்களிலும் சுவிசேஷத்தை பிரபல்யமாக்குவது'** என்ற நோக்கத்தை முக்கியமாகக் கொண்டு திருநெல்வேலி இந்திய மிஷனரி சங்கம் என்ற பெயரில் இச்சங்கம் உருவாக்கப்பட்டது.

இதன் முதல் மிஷனரியாக மருதகுளம் சு.பாக்கியநாதன் உபதேசியார் அவர்களின் மகனும் பாலியர் சங்க மிஷனரியாக இருந்தவருமான திரு.பா.சாமுவேல் பாக்கியநாதன் அவர்கள் 06.04.1904 அன்று புறப்பட்டு சென்றார்கள் திரு.பா.சாமுவேல் பாக்கியநாதன் அவர்கள் பட்டதாரி மட்டுமல்லாது பல மொழிகளை கற்றறிந்த பன்மொழி பண்டிதராக இருந்தார். 1904 முதல் இந்திய மிஷனரி சங்கம் சார்பாக **'சுவிசேஷ பிரபல்ய வர்த்தமானி'** எனும் மாத இதழ் வெளியிடப்பட்டது. இன்று வரை அது வெளிவருகிறது. இரண்டாம் மிஷனரியாக பாலியர் சங்க ஊழியராக இருந்த தேவசகாயம் 05.04.1905 அன்று அனுப்பப்பட்டார். மூன்றாவது மிஷனரியாக திரு.பா.சாமுவேல் பாக்கியநாதன் அவர்களின் உடன் பிறந்த தம்பி பா.சாலமோன் பாக்கியநாதன் 11.10.1906 அன்று அனுப்பப்பட்டார். இந்த மிஷனரி இயக்கம் திருநெல்வேலி மற்றும் தூத்துக்குடி - நாசரேத் CSI திருமண்டலங்களால் பொறுப்பேற்று நடத்தப்படுகிறது.

### 2. நண்பர் சுவிசேஷ ஜெபக்குழு - FMPB

இந்தியாவிலேயே முதல் முறையாக தென் தமிழகத்தில் கோவில்பட்டி நகரில் 1952 ஏப்ரல் மாதம் விடுமுறை வேதாகம பள்ளி சகோதரர் P.சாமுவேல் அவர்கள் தலைமையில் நடைபெற்றது எழுபத்தி ஐந்து சிறுவர்கள் கலந்துகொண்டனர். அதைத்தொடர்ந்து 1953இல் மூன்று இடங்களிலும் 1954ல் 8 இடங்களிலும் 1955இல் 12 இடங்களிலும் விடுமுறை வேதாகம பள்ளி நடத்தப்பட்டது சகோதரர். P.சாமுவேல் அவர்களுக்கு உதவியாக கல்லூரி மாணவர்களான தியோடர் வில்லியம்ஸ், சாமுவேல் கமலேசன், ஃபிரெடி கொக்காலி, ஃபிரெடிடேவிட் ஆகியோர் இணைந்து கொண்டார்கள் இந்த நால்வரையும் நற்செய்தி மாணவர் ஊழியத்தை (UESI) சார்ந்த டாக்டர். நார்டன்ஸ்டென்ட்திரு.P. சாமுவேலுக்கு அறிமுகப்படுத்தினார்.

விடுமுறை வேதாகம பள்ளியின் பின்தொடர் அமைப்பாக நண்பர் ஐக்கியம் என்னும் ஜெபக்குழு 1956 - 1958 களில் தொடங்கப்பட்டது.

திரு P.சாமுவேல் அவர்களின் அக்கா மகன் திரு எமில் ஜெபசிங் அவர்களும், திரு.பேடரிக் ஜோஷ்வா அவர்களும் இந்த ஐக்கியத்தில் இணைந்தார்கள்.

1959 டிசம்பர் மாதத்தில் கோவில்பட்டி நகரில் தனக்கோடி தெருவில் ஒரு வீட்டின் அறையில் நண்பர் ஐக்கியத்தின் பிரதிநிதிகள் 25 பேர் ஒன்றுகூடினர் தெளிவான மிஷனரி தரிசனத்தோடு **(போ அல்லது அனுப்பு)** நண்பர் சுவிசேஷ ஜெபக்குழு எனும் மிஷனரி ஜெப இயக்கம் அந்த நாளில் பிறந்தது. அந்தக் கூட்டத்தில் கல்வராயன்மலை பகுதியில் நடைபெறும் ஊழியங்களை பார்த்துவிட்டு திரும்பிய திரு P.சாமுவேல் திரு தியோடர் வில்லியம்ஸ் இருவரும் கல்வராயன் மலைப் பகுதி ஊழியர்களின் தேவையை பகிர்ந்து கொண்டார்கள் ஊழியங்களுக்காக ஜெபிக்கிற ஜெபக்குழுக்களை தோற்று வித்தார்கள் தொடக்க காலத்தில் IMS மற்றும் NMS முதலிய உள்நாட்டு ஊழியங்கள், தோர்ணக்கல், நீலகிரி, கல்வராயன் மலைப் பகுதிகளில் நடைபெற்ற மிஷனரி ஊழியங்களுக்காக வாரம் ஒருமுறை கூடி ஜெபித்தார்கள். 1960 இல் நண்பர் சுவிசேஷ ஜெப குழுவின் தலைவராக திரு தியோடர் வில்லியம்ஸ் அவர்களும் செயலாளராக திருமதி. ஏஞ்சலா ஜேம்ஸ் அவர்களும் பொருளாளராக திரு.சத்திய சிங் தனராஜ் அவர்களும் பொறுப்பேற்றார்கள்.

போ
அல்லது
அனுப்பு

1960 இல் அறைகூவல் எனும் அரையாண்டு இதழ் தொடங்கப்பட்டது. தற்போது அது மாத இதழாக வெளிவருகிறது. 1960

ஆகஸ்ட் 10 ஆம் நாள் இந்திய மிஷனரி சங்க ஊழியராக ஏஞ்சலா ஜேம்ஸ் அவர்கள் அனுப்பப்பட்டார்கள். வட இந்தியாவில் நடைபெற்ற ஊழியங்களை திரு P.சாமுவேல் திரு.தியோடர் வில்லியம்ஸ் இருவரும் சென்று பார்த்து வந்தார்கள். இந்த ஐக்கியத்திலிருந்து எலியாஸ் தேசிய மிஷனரி இயக்க N.M.S ஊழியராக புறப்பட்டு சென்றார். முதன்முதலாக இந்த இயக்கத்தின் (FMPB) சார்பாக திரு.ஹோரீஸ் ஹில்டன் மற்றும் Dr.புஷ்பராஜ் ஆகிய இருவரும் 09.06.1967 அன்று பெரியமலை பகுதிக்கு மிஷனரிகள் ஆகப் புறப்பட்டு சென்றார்கள்.

### 3. இந்திய அருட்பணி இயக்கம் - IEM

15.01.1965 இல் இந்த இயக்கம் தொடங்கப்பட்டது. இதன் முதல் பொதுச் செயலாளராக டாக்டர். தியோடர் வில்லியம்ஸ் அவர்கள் பொறுப்பேற்றார்கள். ரூபாய் 782 நிதியுடன் ஒரு மிஷனரி உடன் தொடங்கப்பட்ட இந்த மிஷனரி இயக்கம் **'தரிசனம், விசுவாசம், அர்ப்பணம்'** ஆகியவற்றை குறிக்கோளாகக் கொண்டு **'இந்தியாவிலும் வெளி உலகிலும் கிறிஸ்துவை அறிவிப்பது' 'இந்திய கிறிஸ்தவ விசுவாசிகளை தங்கள் பொறுப்பை உணரச் செய்வது'** என்பதை நோக்கமாகக் கொண்டது. இந்த இயக்கத்தின் சார்பாக **'அருட்பணி'** என்ற மாத இதழ் வெளியிடப்படுகிறது.

### 4. விஷ்வாணி - TWR ஊழியம்

வானொலி ஒலிபரப்பு மூலம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிப்பது என தொடங்கப்பட்ட இந்த ஊழியத்தின் மூலமாக 22 இந்திய மொழிகளில் நற்செய்தி ஒலிபரப்பப்பட்டு வருகிறது இதனுடைய வானொலி நிகழ்ச்சிகள் டெல்லியில் உள்ள தேசிய அலுவலகத்தில் ஒளிப்பதிவு செய்யப்பட்டு இலங்கை, சேஷல்ஸ் தீவுகளிலிருந்து ஒலிபரப்பப்பட்டது. திரு.எமில் ஜெபசிங் இயக்குனராக பொறுப்பேற்று செயல்பட்டார். தற்போது இந்த ஊழியம் 'விஷ்வவாணி ஊழியம்' என்பது நற்செய்தி அறிவிப்பு மிஷனரி ஊழியமாகவும் 'TWR **ஊழியம்**' என்பது வானொலி ஒலிபரப்பு ஊழியமாகவும் இரு தனித்தனி நிர்வாகத்தின் கீழ் செயல்பட்டு வருகிறது. விஷ்வவாணி ஊழியம் சார்பில் **சமர்ப்பண்** எனும் மாத இதழ் வெளியிடப்பட்டு வருகிறது.

### 5. ஆசீர்வாத இளைஞர் இயக்கம் - BYM

1960 ஐ அடுத்த ஆண்டுகளில் பரிசுத்த ஆவியானவரின் அக்கினி அபிஷேகத்தை பெற்ற கல்லூரி ஜெபக்குழு மாணவர்களால் அதன் ஜெபக்குழு தலைவர்களான திரு. R.ஸ்டான்லி, திரு. லயனல் ஆகியோரால் சுவிசேஷ ஊழிய குழுவாக இவ்வியக்கம் உருவெடுத்தது. தஞ்சாவூர் ஆபிரகாம் பண்டிதர் தோட்டத்தில் 1971 பொங்கல் விடுமுறையில் இந்த இயக்கம் சார்பாக முதல் ஆசீர்வாத முகாம் நடைபெற்றது 150 பேர் பங்கெடுத்தனர். இந்த இயக்கத்தின் இரண்டாவது ஆசீர்வாத முகாம் '**Blesso**'என்ற பெயரில் நடைபெற்றது. 1972 இல் பூரண சுவிசேஷ வாலிபர் ஐக்கிய குழு (FGYMA) என்ற பெயரில் **'வாலிபர் நடுவில் உயிர்மீட்சி' 'வாலிபர் மூலம் நற்செய்திப் பணி'** என்பதை தரிசனமாகக் கொண்டு இந்த ஊழியம் பதிவு செய்யப்பட்டது.

ஆசீர்வாத இளைஞர் இயக்கம் என பிற்காலத்தில் இதன் பெயர் மாற்றப்பட்டது **'ஆசீர்வாதம்'** எனும் மாத இதழ் வெளியிடப்பட்டு வருகிறது

**J. ஜான் ஞானராஜ், கல்லிடைக்குறிச்சி**

### சில அருட்பணி இயக்கங்கள்

இந்திய மிஷனரி சங்கம் (I M S )
நண்பர் சுவிசேஷ ஜெபக்குழு (FMPB)
விஷ்வவாணி (Vishwavani)
ஆசீர்வாத இளைஞர் இயக்கம்.(B Y M)
சுவிசேஷ பிரதி ஒலி மிஷனரி இயக்கம் (GEMS)
இந்திய அருட்பணி இயக்கம் (I.E.M )
இந்திய இல்லங்களில் நற்செய்தி இயக்கம் (I.E.H.C. )
இந்திய வேதாகம சங்கம் ( B.S.I.)
ஆபரேசன் மொபைலைசேசன் (OM INDIA )
Youth Missionary Movement (YMM)
தென்னிந்திய ஆத்தும ஆதாயகர்கள்இயக்கம்.(siswa)
மஹாராஷ்டிரா கிராம ஊழியங்கள்( MVM)'
ஹிமாலயன் சுவிசேஷ இயக்கம் (HEM)
பெத்தேல் அருட்பணி இயக்கம்.
நேட்டிவ் வில்லேஜ் இயக்கம்.(N V M M )
ஷாலோ மிஷனரி இயக்கம் (S H Y L O H )
Tamil Nadu Gospel Team (T N G T )
அன்பு பகிர்வு இயக்கம் (S H A l O M )
Vision For Orissa Ministries
இந்தியா கேம்பஸ் குருசேட் ஃபார் கிறைஸ்ட் (I C C C)
இந்திய தேசிய மிஷனரி இயக்கம் ( NMSI )
ஆசியாவுக்கு சுவிசேஷம் ( G F A )
கிராம மிஷனரி இயக்கம் (V M M)
கிருபையின் ஊழியம் (Grace Ministries)
புதுவாழ்வு சுவிசேஷ ஊழியங்கள் (N L E M )
இந்திய மிஷனரி இயக்கம் ( IMM)
Hemachal Out Reach Network (HORN)
நாகலாந்து மிஷனரி இயக்கம் (N.M.M)
கிறிஸ்துவுக்கு இளைஞர் இயக்கம் (Y F C)
கேபா மிஷனரி ஜெப ஊழியங்கள்
சபை வளர்ச்சி மிஷனரி இயக்கம் (C.G.M.M )
தமிழ் நாடு சுவிசேஷ குழு திருச்சபை வளர்ச்சி ஊழிய திட்டம்.
தமிழ் நாடு சுவிசேஷ குழு நடமாடும் சுவிசேஷ ஊழியம்
குளோபல் மிஷனரி இயக்கம் (GMS)
இந்திய வேதாகம மொழிபெயர்ப்பாளர்கள் (I.B.T)
தமிழ் நாடு சுவிசேஷ குழு நாட்காட்டி ஊழியம்

வச்சிரமணி கிறிஸ்தியான் வழி வந்த

# செந்தமிழ் புலவர் சங்கை சி.பி. ஞானமணி

ந. ஜான் ஜெயானந்தம்

கடந்த சில மாதங்களாக மேற்படி தலைப்பின் கீழ் சென்றுபோன நூற்றாண்டுகளில் வாழ்ந்து உழைத்த மூன்று இறைப்பணி ஊழியர்களில் வாழ்க்கையையும், பணியைப் பற்றியும் சுருங்கக் கண்டு கர்த்தரைத் துதிக்கும் பாக்கியம் பெற்றோம். இவ்வாறு தொன்மையான வரலாறுகளைத் தாங்கி திங்கள்தோறும் வெளிவரும் இச்சீர்மிகு இந்த ஏட்டிற்காக நாம் அனைவரும் நன்றியுடையோராக இருப்போமாக. கூடுதலான கிறித்தவ புதையல் செல்வத்தைத் தோண்டியெடுத்து இன்றைய தலைமுறையினருக்கு வழங்கும் பணி வளர்ந்து பெருகுவதாக.

இன்று தமிழ் கிறித்தவ உலகம் அறிந்து பாடி பரவசமடையும், "அன்பே பிரதானம் சகோதர அன்பே பிரதானம்", 'காலமே தேவனைத் தேடு" போன்ற என்றும் அழியாத கீர்த்தனைகளைப் புனைந்த சங்கை சி.பி. ஞானமணி (1868-1922) அவர்களின் கிறித்தவ இலக்கிய பணியின் சிறப்பையும், பயனையும் எடுத்துரைக்கும் வகையில் இக்கட்டுரை அமைகிறது. இதற்கு முகவுரையாக சில வரிகள்:

நாம் பேசி, படித்து எழுதி வரும் தாய் மொழியாம் தமிழ், **"முன்னைப் பழமைக்கும், பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாக விளங்கும் தமிழ்"** என்றும், இக்கருத்தை சுருங்கக் கூறும் வண்ணம், **"கன்னித் தமிழ்"** என்றும் அழைக்கப்படுகிறது. சங்கக் காலத்திலேயே வளர்ந்து முழுமை நிலையில் இருந்த இம்மொழி, தொடர்ந்து வளர்ந்து பெருகி, உயர்ந்து நிற்கிறது.

### கிறித்தவரின் பெரும்பங்கு

இத்தகைய மொழி வளர்ச்சியில் பெரும் பங்கு வகித்தோர் தமிழ் கிறித்தவர், கிறித்தவ புலவர், மேலை நாட்டு திருப்பணியாளர்கள் ஆவர். இவர்களின் பங்கு சொல்லில் அடங்காது. அவர்கள் **"கிறித்தவர்கள்"** என்ற பெயர் தாங்கியதினிமித்தம், "கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நிமித்தம் புறக்கணிக்கப்பட்டு ஏற்ற அங்கீகாரத்தைக், கல்வி, கலை, சமுதாய உலகில் பெறாதிருப்பதில் ஆச்சரியம் இல்லை. 'உலகமோ இவர்களை (கிறித்தவர்களை) வெறுத்திருக்கிறது, ஏனெனில் நான் உலகத்திற்கு உரியவனாய் இராதது போல, இவர்களும் உலகத்திற்கு உரியவர்கள் அல்ல' (யோவான் 19:14 இலகு தமிழ்) என்ற நமது ஆண்டவரின் திருவாக்கு பொய்யாகுமோ?

தமிழ் உரைநடைக்கு வித்திட்டு அதை வளர்த்து, அச்சிட்டுக் காட்டியது இறை மகன் கிறிஸ்து நாமம் தரித்த பணியாட்கள் அல்லவா! இருபத்து ஒறாம் நூற்றாண்டில் எழுந்த **"மீட்பதிகாரம் என்னும் பேரின்ப காப்பியம்"** உட்பட கிறித்தவ பெருமக்களன்றோ 34 மரபு வழி தமிழ் பெரும் காப்பியங்களை தமிழ் உலகிற்கு வழங்கி சாதனை படைத்திருக்கிறார்கள். இத்தகைய இலக்கை வேறு எந்த சமயத்தினரும் எந்த மொழியிலும் சாதித்ததில்லை.

ஒரு மொழியின் செழுமை அதன் இலக்கியத்தைச் சார்ந்ததாக இருக்கிறது.

### தமிழ்க் கவிப்புலமை

கவிதை புனைதல் ஒரு பெரும் கலை; கவிஞன் ஒரு அருங்கலைஞன். கருத்துள்ள தன் கவிகளினால் அவன் மக்களின் உள்ளங்களை ஆள்கிறான். உண்மைக் கவிஞன் ஒருபோதும் அழிவதில்லை - அவன் என்றும் வாழ்கிறான்.

கவிஞன் உணர்ச்சி மேலிட்டுத் தன்னை மறந்து பாடுவதே கவிதை. அது கவிஞனின் இருதயத்திலிருந்து மழை பெய்வது போன்று, இயற்கையாகவே பொழிய வேண்டும். **"கட்டுவது கவிதை அன்று, கொட்டுவதே கவிதை"** என்று அதன் தன்மையை ஒருவர் சொல் நயத்துடன் விவரித்துள்ளார்.

கவிஞன் சுருங்கக் கூறி நமது உள்ளங்களைக் கொள்ளை கொள்கிறான். எதையும் ஊடுருவிப் பார்க்கும் கூர்மை அவனுக்கு உண்டு.

'புலவன் தன் உள்ளத்து ஊற்றெடுக்கும் உணர்ச்சியோடு, தன் வாழ்க்கை அனுபவம் என்னும் வண்ணத்தைக் கலந்து, கற்பனை என்னும் மெருகிட்டு, மொழி என்னும் கிழியில் தீட்டும் சொல்லோவியமே இலக்கியமாகும்.' என ஒரு தமிழ் அன்பர் இலக்கியத்தை விவரித்துள்ளார்.

### மும்மணிகளின் படைப்பு

நாம் ஆயந்து வரும் மும்மணிகளின் படைப்புகளில், இப்பண்புகள் அனைத்தும் மலிந்துள்ளன. ஆயினும் இவர்களுடைய படைப்புகளில் பாடல்களில், காணும் மற்றொரு சிறப்பு யாதெனில், இவர்கள் தங்களின் அரும்படைப்புகளுக்கு எடுத்துக்கொண்ட பொருள், அழியும் இவ்வுலக ஜடப் பொருட்கள் அல்ல; சுய சிந்தனைகள் அல்ல; மனிதத்தத்துவங்கள் அல்ல என்றும் நிலைபெற்று பேரின்பம் நல்கும் இறை அரசைப் பற்றியதாகும் - அது திருமறையைச் சார்ந்ததாம். கிறித்தவ சமயம் வளர்ந்து பெருகி வந்த இவர்களின் காலச் சூழ்நிலைகளின் தேவைக்கேற்ப, இவர்களின் படைப்புகளும் அமைந்திருந்தன. தாங்கள் கிறிஸ்துவின் திருவடிகள் முன் அமர்ந்து பெற்று இனிக்கும் அனுபவங்களை எழுதி கர்த்தரையே உயர்த்தினர். ஆகவே அதன் சிறப்பை இன்றைய தலைமுறையினரும் ருசித்து அனுபவிக்கும் வண்ணம் அவை நிலைத்திருக்கின்றன.

### சங்கை சி.பி. ஞானமணி அவர்களின் இலக்கியப் படைப்புகள்

சி.பி. ஞானமணி ஐயரவர்கள் தமிழ்ப் பற்றும் சிறந்த புலமையும் உடையவராவார். அவர் இயற்றிய திருமறையைச் சார்ந்த சிற்றிலக்கியக் கவிப்பாடல் நூல்களாவன:

1. "இலக்கண சிந்தாமணி" தமிழ் இலக்கண நூல்
2. டம்பாச்சாரிச் சரித்திரம் (கெட்ட குமாரன் உவமை) - 1896
3. ஜெபக் குறண் மாலை - 1905
4. கானானிய ஸ்திரியென்ற நல்லதாய் நற்ஜெபக் கவிதை - 1922
5. கர்த்தராகிய கிறிஸ்துவின் சிலுவைப் பாடுகளும் ஏழு வார்த்தைகளும்
6. மரக்கல முனிவர் கவிதை (நோவாவின் சரித்திரம்)
7. மச்ச முனிவர் கவிதை (யோவானின் சரித்திரம்)

8. ஐஸ்வரியவான் - லாசரு உவமான நிர்விசாரி கவிதை
9. யவீருவின் மகள் உயிரோடு எழுப்பின சரிதை
10. கானா ஊர்க் கலியாணம்
11. தசக்கன்னியர் கவிதை
12. எஸ்தரின் சரிதை
13. கலியாண விருந்து உவமை

இவற்றுள் இறுதி நான்கு நூல்கள், பல இடங்களில் தேடி முயன்றும் எமக்குக் கிட்டவில்லை என்பதை வருத்தத்துடன் இங்குப் பதிவு செய்கிறோம். எஸ்தரின் சரிதையில் இறை வணக்கமாக அமைந்துள்ள பாடல் ஒன்று மட்டும் கிடைத்துள்ளது. இக்கவிதைகள் எழுதப்பட்ட ஆண்டுகளையும் அறிய இயலவில்லை. இதுவரை கிடைக்காத நான்கு நூல்களையும் "**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்**" வாசகர்களோ அல்லது பிற அறிஞர் பெருமக்களோ அறிவார்கள் எனில் உதவும் படி வேண்டுகிறோம். இத்தகைய நூல்களைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளும் இளம் தலைமுறையினரை ஆண்டவர் எழுப்புவாராக.

இத்தகைய முயற்சியில் எங்களது குடும்பத்தினர் பலரையும் விசாரித்ததில் வயதான ஒரு மூதாட்டியார், தான் சிறு வயது நாட்களில் வீட்டில் பாடி பழக்கப்பட்ட "கலியாண விருந்து உவமை" (லூக்கா 14:15-24) பாடலின் ஒரு கவியை மட்டும் நினைவுகூர்ந்து அதை எனக்கு எழுதிக் கொடுத்தார்கள். இங்கு அவ்வரிகளைக் காண்க.

பல்லவி

கலியாண விருந்துக்கு வாருமையா
கன உலகானந்தரே - இத்தருணமதில்
சீக்கிரம் நீரே!

பச்சடி கிச்சடி வகை
பலகாரங்களுடனே - மிக
மெச்சும் வற்றல் பாயாசம் அறுசுவை
மேவும் மிக வெழிலாய் - கலியாண

இக்கட்டுரையில் "டம்பாச்சாரி கவிதை" என்ற கீர்த்தனை நூலைப் பற்றிய இலக்கிய இறையியல் நுணுக் கங்களை ஆராய்வதே எனது நோக்கமாகும்.

**வச்சிரமணி கிறிஸ்தியான் வழிவந்த செந்தமிழ் புலவர் சங்கை சி.பி. ஞானமணி**

### டம்பாச்சாரி சரித்திரம் என்ற கிர்த்தனைக் காப்பியம்

"நற்செய்திக்குள் நற்செய்தி" என்று கருதப்படுவதே கர்த்தர் இயேசு கிறிஸ்து அருளிய "கெட்டக் குமாரன்" என்று நாம் அழைக்கும் உவமைக் கதை. இது நாடகமாகவும், பாடலாகவும், பிரசங்கமாகவும் நின்று பாமர மக்கள் மனதில் பதிந்திருக்கிறது. இதை நம் இறையாளர் ஞானமணி அவர்கள் பாமரரும் புரியும் வகையில் மிக எளிய நடையில், சிற்சில இடங்களில் பேச்சு வழக்கிலும், இருப்பினும் மரபு இலக்கணம் பிசகாது பாடியிருக்கிறார். இதனால் சுவிசேஷ செய்தி யாவருக்கும் போய் சேர வேண்டும் என்பதாயினும் தமிழ் புலமையுடைய மக்களும் விரும்பி படித்து பயனடைய வேண்டுமென்பது அவரது நோக்கமாக இருந்துள்ளது .

### கீர்த்தனையின் சிறப்பு

முந்தின நூற்றாண்டுகளில் கிறித்தவ கீர்த்தனைகளை புனைந்தோர் அனைவரும் இறைப்பணியாளர்களாக அனுபவம் பெற்றவராவர். உணர்ச்சி வசத்துடன் எழுந்த இன்றைய பாடல் எழுதியவர் போலல்லர். இறையியல் உண்மைகளை விருப்புடன் கற்று தேறினவர்கள். ஊழியப்பாதையின் துன்பங்களை எதிர்ப்புகளைச் சந்தித்து அதை மேற்கொண்டு எழுந்து வந்தவர்கள். எனவேதான் அவர்கள் இயற்றிய கீர்த்தனைகள் இறையறிவுடையதாக, துன்பம் பாடு அனுபவிப்போரை உயிரூட்டக் கூடியவைகளாக இருக்கின்றன.

இக்கீர்த்தனைகளைப் பாடிய கவிஞர்கள் அனைவரும் இறைவனிடம் நேரிடையாய்த் தொடர்புடையவர்கள். இவர்கள் தங்களின் சொந்த அனுபவங்களையே உள்ளுணர்ந்து, உள்ளம் உருகி உண்மையுடன் பாடியுள்ளனர். இதனால் தான் நாம் அவற்றைப் பாடும்போதும் விழிப்புணர்வைப் பெற்று பக்தி உணர்வடைகிறோம்.

தமிழ்க் கிறித்தவக் கீர்த்தனைகள் பொருள் ஆழம் கொண்டவை. ஆகையால் பொருள் அறிந்து பாடுதல் வேண்டும். அவைகளில் பலவும் அருளுரைகளாகவே அமைந்துள்ளன. பவுலடிகளார் "நான் ஆவியோடும் பாடுவேன், கருத்தோடும் பாடுவேன்" (1 கொரி. 14:15) என்று சொல்லிய வண்ணம் நாமும் அவ்வாறே பாட வேண்டும். திருமறைப் பகுதிகளைச் செய்யுள் வடிவமாக்கியுள்ள கீர்த்தனைகள் பல உண்டு. நம்மை இறைவன் பால் ஈர்த்து, நம்பிக்கையூட்டி வாழ்க்கையில் வளமும் அறிவும் கொண்டு வருகின்றன. அவைகள் சொல்நயம், இசைநயம் கொண்டவையாகையால் எளிதில் மனதில் நிறுத்திக் கொள்ளக்கூடியவை. புலவர் சே. சுந்தரராசன் அவர்கள் குறிப்பிடுவதுபோல், "இப்பாடல்களைப் பாட உருகும் உள்ளமும், இளகும் இதயமும், நெகிழும் நெஞ்சமும் நமக்குத் தேவை" என்கிறார். இத்தகைய ஆழ்ந்த உணர்வுகளைத் தன்னகத்தே கொண்டுள்ள இனிய பாடல்களைப் போற்றிக்காத்துப் பாடிப் பயனடைந்து படிப்பித்தும் வளர்ப்பது நமது கடமையாகும்.

இத்தகைய இனிய தமிழ்க் கீர்த்தனைகளைச் சொற்பிழை, சுரப்பிழை, தாளப்பிழை முதலியவைகள் இல்லாது, இனிதே பாடப் பழகுதல் தமிழ் கிறித்தவர்களின் பொறுப்பாகும்.

இத்தகைய கீர்த்தனைப் பாடல்களால் ஆனதே டம்பாச்சாரி கவிதை.

### டம்பாச்சாரி - பெயர் சுட்ட காரணம்

நமதாண்டவர் எடுத்து கூறிய அந்த ஒப்பற்ற உவமை இன்று கிறித்தவர்களிடையே "கெட்ட குமாரன் உவமை" என்றே அறியப்படுகிறது. ஆயினும் இத்தலைப்பு, இவ்விறை அன்பு, இறையருள் ததும்பும் இவ்வுவமைக் கதைக்குப் பொருத்தமாக இல்லை. "மனந்திரும்பிய குமாரன் என்று மகனின் சிறப்பைக் குறிப்பதாகவோ, அல்லது "அன்புத் தகப்பன் என்று தகப்பனுடைய இதய பாசத்தைக் குறிப்பதாகவோ அறியப்படுமாயின் அதுவே பொருத்தமாக அமையும்.

இக்காப்பிய ஆசிரியரின் வாழ்நாட்களில் "டம்பாச்சாரி விலாசம்" என்ற ஒரு கீர்த்தனை நாடகம் மிகவும் பிரபலம் அடைந்து இரவுநேரங்களில் பொது இடங்களில் அறங்கேற்றப்பட்டு திரள் கூட்டத்தைக் கவர்ந்து வந்தது. விண்திரை, தொலைக்காட்சிகள் இல்லாத அந்நாட்களில் நாடகம் ஒன்றே பொழுது போக்கும் ஏதுவாக இருந்தது. அது ஒரு சிற்றின்ப நாடக சாகரமாக விளங்கியதால்,

அதைத் தூர்த்து இறைசெய்தி புகட்டும் நோக்கில் எழுதிய இந்த உவமைக் கதைக்கு பொது மக்கள் பழக்கப்பட்டிருக்கும் "டம்பாச்சாரி" என்ற வழக்குச் சொல்லையே கெட்டக் குமாரன் உவமைக்கு பெயராகச் சுட்டியிருக்கிறார்.

**டம்பாச்சாரி கவிதை நூல் எழுந்த காரணம்**

இந்நூலாசிரியர் இதை எழுதுவதற்குரிய திருநோக்கத்தைத் தமது பாயிரத்தில் வெளிப்படுத்தியுள்ளார். அந்நாட்களில் தெருக்கூத்து நாடகங்கள் மலிந்திருந்தன. அவை மக்களுக்கு உல்லாசம் ஊட்டி, தீய பாவ வழிகளில் இழுத்துச் சென்றன. அன்று மக்களிடையே "டம்பாச்சாரி விலாசம்" என்ற சிற்றின்ப சாகரத்திற்கு மாற்றாக, மெய்யின்ப பக்தியூட்டி, மக்களைச் சீர்ப்படுத்தும் உயரிய நோக்கோடு "டம்பாச்சாரி கவிதை" புனையப்பட்டுள்ளது. இது ஒரு சமுதாயச் சீர்த்திருத்த நோக்காகவும், அதன் வழியில் இறைபோதனைகளையும் தெளிவுறப் போதித்து, மக்கள் மனதில் பதியத்தக்க வகையிலும் இது இயற்றப்பட்டுள்ளது. எனவே இத்தலைப்பு இவ்வாறு இடம் பெற, எழுதிய நோக்கமே காரணமாகிறது.

"டம்பாச்சாரி விலாசம்" என்ற நூலின் தன்மைதான் என்ன என்று அறிய அப்பழமை வாய்ந்த நூலைத் தேடிக் கண்டு பிடித்து, அதன் நகல் ஒன்று என்னிடம் உள்ளது.

காசி விசுவாசநாத முதலியார் இயற்றியுள்ள இந்த "டம்பாச்சாரி விலாசம்" மற்றும் நம் இறைப் பணியாளர் வடித்துள்ள "டம்பாச்சாரி கவிதை" ஆகிய நூல்களிலிருந்து, இவர்களது காலத்தில் பேச்சு வழக்கில் இருந்த "டம்பாச்சாரி", "டாம்பீகம்" என்ற சொற்கள் பற்றி அறிகிறோம். இவர்களது சமகாலத்தவரான இரட்சண்ய ஆசிரியர் கிருட்டிண பிள்ளை அவர்களும் தமது இரட்சண்ய யாத்திரிகம் காப்பியத்தில், மாயாபுரிப் படலம் 29-ஆம் பாடலில் "டாம்பீகம்" என்ற இவ்வழக்குச் சொல்லைத் தமது இலக்கியத்தில் ஏற்றியுள்ளார் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். இவ்வாறு இவ்வுலகமாகிய மாயாபுரி என்ற கேடர்பாளையத்தில் உலாவிச் சீர்கெடும் மக்களை உணர்த்தி, நல்வழிப்படுத்தும் ஒரு சொல்லாக கவிமணி அவர்கள் இதை மாறியுள்ளதைக் காண்க.

சங்கை ஞானமணி அவர்கள் "டம்பாச்சாரி விலாசம்" நாடகத்தை கண்டிருக்க வேண்டும். அதில் காணும் உலக, சரீர இச்சைக்குரிய சிந்தைகள் அவரது உள்ளுணர்வைக் குத்திவிட்டு, தாம் வேதாகமத்தில் கண்டிருந்த ஊதாரி மகனான இளைய மகன் உவமை அவர் நினைவுக்கு வரவே, தனக்கு முன்னாக நடிக்கப்பட்ட நாடகத்திற்கு மாற்றாக, கிறிஸ்துவின் நற்செய்தி அடங்கிய நல்லதொரு கிறித்தவ இசை நூலை உருவாக்கும் சிந்தை அவர் உள்ளத்தில் உதித்திருக்க வேண்டும். அவர் தாம் குருத்துவ படிப்புக்காக இறைபடிப்புக்குச் செல்லும் முன்னரே அவர் தமிழ் ஆசிரியராக பணியாற்றி வந்த காலக்கட்டத்தில் இதை எழுதியுள்ளார். அவர் தமிழ் இலக்கணத்திலும், தமிழ் இசையிலும் புலமைப் பெற்றிருந்தார். அவர் எழுதியிருந்த "இலக்கிய சிந்தாமணி" என்ற தமிழ் இலக்கண பாட நூல் அந்நாட்களில் கல்வித் துறை அதிகாரிகளினால் பள்ளிப் பாட நூல் ஒப்புதல் பெற்று 05.11.1895 நாளிட்ட Fort St. George Gazette இல் அரசு ஆணையிட்டிருந்தது. இந்நூலை அவர் 1900 ஆண்டுக்கு முன்னதரே இயற்றி, கிறித்தவ இலக்கியத்திற்கு ஒரு பெரும் பங்களித்திருக்கிறார்.

**டம்பாச்சாரி கவிதை என்ற கீர்த்தனைக் காவியம்**

"டம்பாச்சாரி கவிதையின்' பெரும்பகுதி கீர்த்தனைகளினாலே அமைந்திருப்பதினால் இதனை 'கீர்த்தனைக் காப்பியம்" என அழைக்கத் துணிந்தோம். ஒரு காப்பியத்திற்குத் தேவையான இலக்கணக் கூறுகள் அனைத்தும் இதில் இடம் பெற்றிருக்கின்றன.

இக்காப்பியத்தின் பொருள் சத்திய வேதாகமத்தில் லூக்கா நற்செய்தி நூலின் 15-ஆம் அதிகாரமாகும். இதுவே இக்காப்பியத்தின் "வினையில் நீங்கி, விளங்கிய அறிவின் முனைவன் கண்ட முதநூலாக" இருக்கிறது.

"முன்னோர் நூலின் முடிபெருங்கோத்துப் பின்னோர் வேண்டும் விகற்பங் கூறி அழியா மரபினது வழி" என்று எழுந்த வழிநூலே இது. ஒரு காப்பியத்திற்குத் தேவையான கூறுகள் அனைத்தும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. "நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகி' என்ற தண்டி இலக்கணத்திற்கேற்ப அறம், பொருள், இன்பம், வீடுபேறு ஆகிய நாற்பொருள் இதில் இடம் பெற்றுள்ளன.

ஒரு காப்பியத்தில் காண வேண்டிய ஏனைய கூறுகளான காப்பிய பொருளை வளர்த்தி, விவரித்து விரிவாக்கிய திறன் இதில் உள்ளது. இதில் சிற்றின்பத்திற்கு பதிலாக பேரின்பமே இடம் பெற்று மேலோங்கி நிற்கிறது. இதில் கவிஞரின் கவிநயம் ஆழ்ந்த கற்பனைத்திறன் அவற்றை வெளிப்படுத்தும் புலமையும் தெள்ளென வெளிப்படுகின்றன.

கவிமணியவர்கள் யாப்பிலக்கணம் பிழையாது கவிகளையும், கீர்த்தனைப் பாடல்களையும் புனைந்திருக்கிறார். இலக்கணம் கற்றோர் கட்டுப்பாடுடன் வாழ்வர். இதற்கு நமது கவிமணியவர்கள் சான்று. இவர் ஆன்மீக கட்டுப் பாடுடன் வாழ்ந்தவர் என்பதை இப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

இதில் கடவுள் வாழ்த்து, திரியேகருக்கு நமஸ்காரம், அவையடக்கம் ஆகிய பகுதிகள் பெருங்காப்பியத்திற்காண கூறுகளாம்.

ஓர் அனுபவம் பெற்ற கவிஞன் அவையோருக்குக் கூறும் அவையடக்கம் எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தத்தில் இடம் பெற்றிருக்கிறது.

எழுத்தினிற் றேர்ந்து விழுப்பொரு ளார்ந்த
இணையிலை யெனத்தகு மறிஞர்
எழுத்தனின் மிக்க வாய்ந்தறி யாதா
னியம்பிய வொருசிறு கவிநூல்
இழுக்குள தேனு மிழுக்கென மன்னே
எங்கணு மிகழ்வரோ? மனத்தி
னழுக்கொடு தன்செய் புரிதவ றுகளை
யப்பனும் பொருத்தன னலவோ?
விழு = சிறந்த இழுக்கு = குற்றம், தாழ்வு கேடு

அன்புத் தகப்பன் மனந்திரும்பி வந்த மகனை கட்டித் தழுவி முத்தியிட்டதை கூறும் பாடல்

**விருத்தம்**

கண்மணி மகனே முத்தி, காதலா வுனக்கு முத்தி,
பொன்மணி நீயே முத்தி, புதல்வனே அரசே முத்தி,
நன்மணி சரமே முத்தி, நவிலுநற் குணனே முத்தி.
என்னரு மைந்தா முத்தி, இட்டுவாழ்த்துகிறேன் முத்தி!

யென முத்தி மழை பொழிகிறார்.

இவ்வாறு திரும்பி வந்த மகனையெண்ணி அருள்நிறைத் தகப்பன் மகிழ்ந்து களிகூறும் பாடலில் இறுதி வரிகள் லூக்கா 15:32 ஆம் வசனத்தின் அடிப்படையில் கவிஞரின் இறுதி பாடல் இதனை தெளிவு செய்கிறதைக் காண்க.

ஆ! களிகூர்ந்தே மிதநாம்
ஆனந்தங் கொண்டாடுவோம்!

பொருளை யழித்துச் சுகத்தைக் கெடுத்துப்
புத்தி கற்றான் மகனுங்காண்
அருளை விரும்பி அவனும் வரவே
ஆவலோடு இருந்தேன் நான்.

பாவியொருவன் மனந்திரும்ப
பரத்தில் களிப்பு மிகுக்குங் காண்
ஆவலாக இதயமதனில்
ஆவியதனை பளிப்பார் காண்!

இப்பாடலிலும் ஈற்று அசை 'நான்', 'காண்' என புலவர் அமைத்துக் கையாண்டிருப்பதைக் காண்க.

இனி இக்கீர்த்தனைக் காப்பியத்தின் சிறப்புகளை வரிசைப்படுத்திக் காண்போம்

**இசைத்திறன்:**

புலவரின் இலக்கியப் படைப்புகள் அனைத்தும் மரபுக்கவிதை வடிவில் தமிழ்கவி இலக்கணத்திற்கு உட்பட்டு இருந்தது போலவே, அவரது கீர்த்தனைப் பாடல்கள் இசையிலும் மேம்பட்டு, கேட்போரின் உள்ளத்தில் பாயக்கூடியதாக இருக்கின்றன. கதையின் போக்குக்குக் ஏற்றபடி பாடல்களில் வரிகள் பொருள் ஓசைக்கு ஏற்றபடி இனிக்கின்றன.

டம்பாச்சாரி தனது ஆஸ்திகளை ஒன்று சேர்த்து, கேடல் பாளையம் சென்று ஆனந்த பரவசம் அடைந்ததை கவிஞர் இசையுடன் பாடுகிறார்.

பல்லவி
ஆனந்தம்! பேரானந்தமே!
நானித்த உலகினில் - நாட்கழிப்பது மெத்த ஆனந்தமே

முத்தியுலகுமிதில் - மூன்றிலே ஒன்றினுக்கும்
ஒத்திடுமோ - பேரானந்தமே!
கூட்டு நண்பர்களில் எடுப்பு - விருந்தினர் – நாமவழி
டம்பாமா சீமோனே
சம்பிரம பூமானே!

இத்தகையத் தீயக்கூட்டு ஆனந்தம் எத்தனை நாட்கள்தான் நீடிக்கும்? சிலநாட்களில் டம்பன் குறைவு பட தொடங்கினான் (லூக். 15:14). அதை புலவர் கலிவிருத்தம் பாடலில் விவரிக்கிறார்.

தேடா தமித்த திருவெபாம்பின் பெரிய
பாடாய் முடியும் பார்வளமை மறந்து,
கேடாய் நடந்து, கேவலமா யெலும்புக்
கூடாய் மெலிந்து குன்றினான்டம் பனுமே!

கடன் காரர் டம்பன் வீட்டை ஏலம் போட்டதை விவரிக்கும் பாடல் காம்பேதி இராகத்தில் ஆதிதாளத்தில் அமைந்திருக்கிறது.

டம்பனவன் வீடேலம்-டம் டமா, டமடமா
டமுளநங்கம் பளமுமேலம் -டம் டமா, டமடமா
செம்பு கும்பா கிண்ணியேலம் -டம டமா, டமடமா
சீட்டிச் சட்டை குட்டையேலம் -டம டமா, டமடமா

டம்பன் தாழ்ந்து பன்றி மேய்க்கும் வேலையில் அமர்த்தப்பட்டான். அவனது அத்தகைய தீழ்ப்பான வாழ்க்கையை விவரிக்கையில், "பன்றிகளியல்பு கூறல்" என்ற பாடல் அவரது கவித்திறனையும் இறையறிவையும் புலப்படுத்துகிறது.

**தருக்கள்**

1. அசுத்த விலங்குகளாம் பன்றிஜாதி- உண்ண
லாகாதென்றே விலக்கப்பட்ட ஜாதி - (உபா.14:8)
அசைபோடாதிருக்கும் பன்றிஜாதி-அதை
ஆருந்தொடப்படாதாம் பன்றிஜாதி.

**பாத்திரப் படைப்புத் திறன்**

ஆண்டவர் இயேசு மனந்திரும்பின மகன் கதையை எடுத்துரைத்தபோது, தந்தை மகன் உறவு, பாவத்தின் விளைவு, மெய்யான மனந்திரும்புதல், பாவ அறிக்கை, இறையருள், பாவ மன்னிப்பு, வீடு இன்பம் போன்ற இறையியல் கூறுகளைக் கூறாமல் கதையின் வளர்ச்சியில், நமதாண்டவர் இயேசுபிரான் சுருக்கமாக ஆயினும் தெளிவாக புரியும்படி சுமார் 20 வசனங்களில் விவரித்துள்ள வேத உவமையைப் புலவர் வளர்த்து நீட்டி, ஆயினும் சளைத்து போகாதபடி, இறை உண்மைகளைச் சுவைப்பட புகுத்தி புனைந்துள்ளார். கதையுடன் இறை கற்பனைகளையும் இணைத்து, இனிய இசையுடன் கீர்த்தனையாக வழங்கியிருப்பது எத்தனை மேன்மை! இத்தகைய ஆழ்ந்த இலக்கிய சுவையை இன்றைய தலைமுறையறியாது மேற்போக்காக அந்த டம்பனைப் போன்று சுற்றி அலைவது வேதனைத் தருகிறது.

இவ்வுவமையில் காணும் தகப்பன், இறைதந்தைக்கு உருவகமாகையால் அவரை "ஸ்ரீ சதானந்த மகா இராஜன்" என்றும், இறைவன் தம் திருச்சபையில் உலாவி வருகிறபடியால் அவர் குடியிருந்த ஊரைச் "சித்சபாபுரம்' என்றும் மூத்த குமாரன் தன் தகப்பன் சொற்கேட்டு அவரது கட்டளைகளின்படி ஒழுங்காக நடந்து வந்தமையால் அவனைக் "கிரமாசாரி' எனவும், இளைய குமாரனோ ஆடம்பர வாழ்க்கை நடத்திப் பக்தியின்றி டாம்பீகமாக வாழ்ந்தபடியால் "டம்பாச்சாரி" எனவும், அவன் சென்றடைந்த தூரதேசம் பகட்டான பாவ வாழ்க்கையின் இருப்பிடமாகையால் "கேடர் பாளையம்" எனவும் சித்தரிக்கப்பட்டுள்ளன.

இவ்வுவமையைக் கருப்பொருளாகக் கொண்டு மரியதாஸ் என்பார் இயற்றியுள்ள "ஊதாரிப் பிள்ளை விலாசம்" என்னும் நாடக நூல் ஒன்று 1898-இல் அச்சிடப்பட்டதாகவும், அதனை மறைதிரு சி. மணிவளன் 1993-இல் மீண்டும் அச்சில் கொண்டு வந்ததாகவும் முனைவர் கூ. இன்னாசி "கிறித்தவத் தமிழ்க் கொடை - தொகுதி 2" (பக்கம் 136) - இல் குறிப்பிட்டுள்ளார்.

**தொடரும் ..**

# நூல் விமர்சனம்

விடையூழியப்பணி செய்ய இந்தியாவுக்கு வந்த ஐரோப்பியர் அநேகர். இவர்களில் பலர், வெறும் சமயப்பணி மாத்திரம் செய்யாமல், அவ்வப்போது தாங்கள் கண்டவைகளை, கேட்ட வைகளை, வாசித்தவைகளை பதிவுகளாக விட்டுச்சென்று விட்டனர். அந்நாளைய **'டின்னவேலி'** மாவட்டம் என்று அழைக்கப்பட்ட தென் தமிழ் நாட்டில், ஊழியம் செய்த டாக்டர் ராபர்ட் கால்டுவெல் ஐயர் (பொ. சகா. 1814-1891) சமூகத்தின் கடை நிலையில் இருந்த மக்கள் மத்தியில், சுவிசேஷ பிரச்சாரம் செய்து, நாற்பதாண்டுகளுக்கு மேலாக இடையன்குடி என்னும் சிறு கிராமத்தில் தங்கியிருந்திருக்கிறார் என்பது ஆச்சரியமூட்டும் தகவல்.

வெறும் ஆறாயிரம் பேர் கிறித்தவர்களாக இருந்த அந்த பிராந்தியத்தில், பனை மரம் ஏறும் தொழிலாளர்கள் மத்தியில், தனது விடையூழியப்பணி மூலமாக இரண்டு லட்சம் பேரை கால்டுவேல் ஐயர், கிறித்தவர்களாக மாற்றியுள்ளார் என்ற தகவல் 'திருநெல்வேலி ஊழியம் குறித்த பிரசங்கங்கள்' ( Lectures on the Tinnevelly Missions – Descriptive of the Field, the Work and the Results ) என்ற நூலின் மூலமாய் வெளிப்படுகிறது. அந்நாளைய 19-ம் நூற்றாண்டில், தகவல் தொடர்பு சாதனங்கள் அதிகம் இல்லாத சூழலில், எழுத்து ஒன்றின் மூலமாகவே நிகழ்வுகள் யாவும் பதிவு செய்யப்பட்டு வந்துள்ளன. இந்த மெய்மையின் பின்புலத்தில், தென் தமிழகத்தின், சமூக, சமய, பொருளாதார சூழல்களை தெளிவாய் பதிவு செய்வதில், இந்தப்புத்தகம் வெற்றி பெற்று விடுகிறது.

கால்டுவெல் ஐயர், ஒரு சமய பிரச்சாரகர் மட்டுமல்ல. நல்ல சமூக சேவகர். 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' என்ற கருத்தின் வழி நின்றவர். நல்ல மொழிபெயர்ப்பாளர். நல்ல சரித்திர ஆசிரியர். அகழ்வாராய்ச்சி செய்தவர். நல்ல எழுத்தாளர். இந்த அனைத்துமே இந்த ஒரே நூலின் வாயிலாக வெளிப்பட்டு விடுகிறது எனலாம்.







**கிடைக்குமிடம்**

**"ஷேக்ஸ்பியர்ஸ் டெஸ்க்"**
**எண் 33 தெற்கு ரத வீதி**
**ஸ்ரீவில்லிபுத்தூர் அ. கு. 626 125**
**விருதுநகர் மாவட்டம்.**
**அலை : 9080551905**
**நூல் விலை ரூபாய் : 200-00**
**தபாலில் பெற : ரூபாய் 250-00**

**வெளியீட்டோர்: ஸ்ரீவில்லிபுத்தூர் எஸ். ரமேஷ்**

ஒருங்கிணைந்த சேலம் பகுதிகளில்

# கிறிஸ்தவ மிஷன் இயக்கங்களின் பங்கும் பணிகளும்

- ஒரு வரலாற்றுப் பார்வை பகுதி -2

**லண்டன் மிஷனெரி சங்கம் :**

சேலம் வந்த சீர்திருத்தக் கிறிஸ்தவத்தின் முதல் நற்செய்திப் பணியாளர்களான சங்கை ஹென்றி கிறிஸ்பு மற்றும் அவர் தம் மனைவி திருமதி.எலிசா ஸ்டெப்பி ஆகியோர் சேலம் மிஷனை ஸ்தாபித்து அதன் அஸ்திபாரத்தில் தங்கள் உயிர்களை ஜீவ கற்களாக பதித்து விட்டார்கள். இவர்கள் தியாகத்தில் சேலம் மிஷன் உருவாகி வளர்ந்தது. சேலம் மிஷனுக்காக இவர்கள் சேலம் கோட்டைக்கும், செவ்வாய்ப்பேட்டைக்கும் இடைப்பட்ட இடத்தில் பங்களாவுடன் கூடிய 30 ஏக்கர் நிலத்தை வாங்கி அங்கே பள்ளிக்கூடங்களைக் கட்டினார்கள். அன்றைய ஆங்கில அரசாங்கத்தின் மன்றோ கல்வித் திட்டத்தின்படி அரசு உதவியுடன் முதலில் நான்கு ஆரம்ப பாடசாலைகளைத் துவக்கினார். இந்தப் பள்ளிகளில் ஆங்கிலம், தெலுங்கு, மராத்தி, மற்றும் பெர்சியன் போன்ற மொழிகள் கற்றுத்தரப்பட்டது. இவை தவிர மேலும் பல பள்ளிகளை கிறிஸ்பு துவக்கி நடத்தி வந்தார். சேலம் நகரில் முதன்முதலில் அனைவருக்குமான பள்ளிக்கூடங்களைத் துவக்கியவர் இவர்தான். அதனால் தான் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயரை சேலம் ஆரம்பக் கல்வியின் தந்தை (Father of Primary Education in Salem) என சேலம் வரலாறு போற்றுகிறது. இதனைத் தொடர்ந்து மிஷன் வளாகத்தில் உள்ள பள்ளிக்கூட அறையில் அன்றைய சேலம் நகரின் சீர்திருத்த கிறிஸ்தவத் திருச்சபையின் முதல் ஆராதனையை கி.பி. 1828 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 3ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமையின் மாலை ஆராதனையில் 20 பேர் கூடிவர நடத்தி சரித்திரம் படைத்தார்.

சேலத்தில் பெண்களுக்கான முதல் பள்ளிக்கூடத்தை கி.பி.1829ல் ஐயரின் மனைவி திருமதி.எலிசா ஸ்டெப்பி அம்மையார் துவக்கி, சேலம் வரலாற்றில் பெண்கல்வி முயற்சிகளில் முன்னோடியாகத் திகழ்ந்தார் (Pioneer of women's Education in Salem). இதனைத் தொடர்ந்து அன்றைய சேலம் நகருக்கான முதல் சீர்திருத்த கிறிஸ்தவ திருச்சபையின் தேவாலயத்தை 31-7- 1831 அன்று கட்டிமுடித்தார். சேலம் வந்த 4 வருடங்களில் மகத்தான இந்த சாதனைகளை கிறிஸ்துவுக்காக சாதித்தவர்கள்தான் இந்த முன்னோடி இளம் மிஷனெரிகள் என்றால் அது மிகையாகாது.

**சேலத்தில் உண்டான கொடிய பஞ்சமும், முதல் கிறிஸ்தவ குடியிருப்பும்:**

கி.பி.1833 ல் சேலத்தில் ஒரு மிகப்பெரிய பஞ்சம் உண்டானது. சேலத்தில் அப்பொழுது லண்டன் மிஷன் மிஷனெரியாக இருந்த சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயர் (Rev.George Walton,L.M.S.,) சேலம் மிஷன் வளாகத்தில் ஒரு கஞ்சித் தொட்டியை (Alms house) ஆரம்பித்தார். அதில் நாள் ஒன்றுக்கு சுமார் 500 பேர்களுக்கு உணவளித்து வந்தார்.

பஞ்ச காலம் முடிவடைந்த நிலையில் கி.பி. 1834 ல் வால்டன் ஐயர் சேலம் மிஷன் வளாகத்தில் கிறிஸ்தவ குடியிருப்பு ஒன்றை உருவாக்கினார். சேலம் பகுதிகளில் கிறிஸ்தவர்களுக்கென்றே உருவாக்கப்பட்ட முதல் கிறிஸ்தவ கிராமம் இதுதான். இதன் நீட்சிதான் இன்றும் இருக்கின்ற சேலம் கிறிஸ்டியன் பேட்டை (Christianpet)ஆகும். சங்கை மாப்ஸ் ஐயர் (Rev.G.Mabbs,L.M.S., -period of service -1862 - 65) காலத்தில் கி.பி.1863ல் சேலம் மிஷன் வளாகத்தில் இருந்த கிறிஸ்தவ குடியிருப்பில் இடப்பற்றாக்குறை ஏற்பட்டு அசௌகரிய நிலை நிலவி வந்த நேரத்தில், கிறிஸ்தவர்கள் சேலம் மாவட்ட சிரேஸ்தாராக அப்பொழுது இருந்த திரு.டேவிட் பால் பிள்ளை (சேலத்துச் செம்மல் K.T.பால் அவர்களின் தந்தை) அவர்களிடம் மனு அளித்த நிலையில், அவர் ஆட்சியரிடம் பேசி, சேலம் கோட்டையின் தென்பகுதியில் சேலம் லண்டன் மிஷன் கிறிஸ்தவர்களுக்கான ஒரு கிறிஸ்தவ குடியிருப்பு **'கிறிஸ்டியன் பேட்டை'** என்ற பெயரில் உருவாக்கப்பட்டது. இங்கே லண்டன் மிஷன் கிறிஸ்தவர்களுக்கு இலவசமாக வழங்கப்பட்ட அந்த நிலப்பகுதி, மனை மனையாக பிரித்து சங்கை மாப்ஸ் ஐயரால் வீடுகள் ஒதுக்கப்பட்டது. (Rev.Mabbs divided the land manai, by manai according to the number of christians) ஒவ்வொரு மனையும் 60-90 அடி நீளமும், 25 அடி அகலமும் உள்ளதாக இருந்தது.

**இந்தியாவின் முதல் தொழிற் பயிற்சி பயிலகம் :**

கி.பி.1840ல் அன்றைய சேலம் நகரில் இந்தியாவிலேயே முதல்முறையாக தொழிற்கல்வியைப் போதிக்கும் ஒரு பயிலகத்தை (Industrial School) சங்கை J.M.லெக்லர் ஐயர் துவக்கி நடத்தியது ஒரு புரட்சிகரமான சாதனை என்றே சொல்ல வேண்டும். பல்வேறு மிஷன் ஸ்தாபனங்களிலிருந்தும், சமஸ்தானங்களிலிருந்தும் மாணவர்கள் இங்கு வந்து தங்கியும் படித்து பயன் பெற்றனர். முதல்முதலில் விடுதியில் தங்கி படிக்கும் முறையும் இங்கு தான் ஏற்பட்டது. தச்சுத் தொழில், இரும்பு உலோகப் பிரிவு, செங்கல் மற்றும் ஓடு செய்தல், தையல் தொழில், கட்டிடப் பிரிவு, போன்றவை இங்கு கற்றுத் தரப்பட்டது.

பேசல் மிஷன் என்ற மிஷனெரி இயக்கம் (1815) சுவிட்சர்லாந்து நாட்டின் பேசல் (Basel) என்ற இடத்திலும், அருகே அமைந்த கிறிஷ்சோனா (Crishona) என்ற இடங்களில் நல்ல தொழில் பயிற்சிகளை அளிக்கும் மிஷனெரிகளை உருவாக்கி உலகின் பல்வேறு மிஷன் பணித்தளங்களுக்கும் அனுப்பி தொழிற்கல்வி முயற்சிகளுக்கு உத்வேகம் அளித்து வந்தது. ஐரோப்பாவில் லண்டன் மிஷன் பணிகளுக்காக நிதி திரட்டுவது, மற்றும் இளம் மிஷனெரிகளை அழைத்து வருவது, போன்ற நோக்கங்களுக்காக பயணப்பட்டிருந்த லெக்லர் ஐயரின் மனைவி திருமதி.அன்னி ரோசா லெக்லர் அம்மையார் அந்த மிஷன் அமைப்போடு பேசி தன்னுடன் திரு.கார்ல் இராம் (Mr.Carl Rahm)என்ற இளைஞரை சேலம் தொழிற்கல்வி பயிலக வளர்ச்சிக்காக அழைத்து வந்தார். பின்னர் திரு.போசிங்கர் (Mr.Boesinger) என்ற இளம் மிஷனெரியும் பேசல் மிஷனிலிருந்து சேலம் அனுப்பப்பட்டார். இவர்கள் இருவரின் முயற்சிகளால் சேலம் தொழிற்கல்வி பயிற்சி பயிலகம் நன்கு வளர்ந்து சிறந்தது. திரு. போசிங்கரின் இரும்பு உலோகப் பிரிவு உருக்காலை (Boesinger's Forge) அன்றைய சேலத்தில் ஒரு அதிசயமாகவே பார்க்கப்பட்டது. சேலம் அருகே அமைந்த

கஞ்சமலையிலிருந்து இரும்புத்தாது வெட்டி எடுத்து அதை உருக்கி பல்வேறு உபகரணங்கள் செய்யும் பணிகளும் புதுமைப் புரட்சியாக செய்யப்பட்டது. மேலும் 1855ல் ஐரோப்பாவில் தனது விடுமுறையை முடித்துக்கொண்டு சேலம் திரும்பிய லெக்லர் ஐயர் தன்னுடன் சங்கை கியூப்லர் (Rev.T.G.Kuebler), செல்வி ரிட்லி (Miss.Ridley), செவிஷில் (Miss.Schill), திரு.ஹால்ஸ்வொர்த் (Mr.Holzwarth), மற்றும் திரு.எபிஞ்ஜர் (Mr.Eppinger) ஆகியோர் அடங்கிய ஒரு பெரிய வல்லுனர்கள் குழுவினருடன் வந்து சேலம் தொழிற்கல்வி பயிற்சி மையத்தை சிறப்பாக வளர்ச்சிப்பாதையில் செலுத்தினார்.

**சேலத்தில் லுத்தரன் மிஷன் இயக்கங்கள்: பங்கும் பணிகளும்.**

சேலத்திற்கு வந்த முதல் லுத்தரன் மிஷனெரி சங்கை ஆக்ஸ் ஐயர் தான் (Rev.C.Ochs.) ஆரம்பத்தில் லீப்சீக் மிஷனிலிருந்து பிறகு டேனீஸ் மிஷனில் இணைந்தவர். கி.பி.1850களில் சேலத்திலும், ஏற்காட்டிலும் தனது ஊழியத்தைச் செய்தவர். இவர் சேலத்தில் ஊழியம் செய்து வரும் போது இவரது 3 வயது மகன் இறந்த போது அவனை விதைத்த கல்லறை (Heinrich George, S/O the Rev.C.Ochs - died 3-2-1853 ) இன்றும் சாட்சியாக சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் உள்ளது. மாயவரத்தில் புகழ்பெற்ற பாதிரி மாம்பழமும் அங்கே இவரது தோட்டத்தில் உருவாகி உலகப் புகழ் பெற்றது. சேலத்தில் டேனீஸ் மிஷன் மற்றும் லுத்தரன் மிஷன் இயக்கங்களுக்கு இவர் தான் முன்னோடி.

தனது கணவர் சங்கை லெக்லர் ஐயரின் மரணத்திற்கு பின்பு திருமதி.அன்னி ரோசா லெக்லர் அம்மையார் சங்கை.ஹெரே (Rev.Herre) என்ற ஜெர்மானிய போதகரின் துணையோடு கி.பி.1863 ல் சேலம் ஏற்காட்டில் தனது ஊழியத்தைத் தொடங்கினார். ஆனால் சங்கை ஹெரே கொஞ்ச காலத்தில் தனக்கென ஒரு லுத்தரன் மிஷன் திருச்சபையை ஏற்காட்டில் உருவாக்கிக் கொண்டது மட்டுமல்லாமல், தரங்கம்பாடியிலிருந்து செயல்படும் இவான் ஜெலிக்கல் லுத்தரன் மிஷன் இயக்கத்தின் (Evangelical Lutheran Mission) உதவியையும் கோரினார். தற்பொழுது ஏற்காடு லேடீஸ் சீட் போகும் வழியில் உள்ள 'சத்திய வாசகர் கோயில் 1876' மற்றும் 'லுத்தர்பேட்டை' ஆகியவை இவர் மற்றும் இவரது பின்னடியார்களின் முயற்சிகளின் சாட்சியே.

ஏற்காட்டின் அசம்பூர் தாபோர் பகுதியில் ஒரு தேவாலயம் டேனீஸ் மிஷனெரி சங்கத்தார் (Danish Missionary Society D.M.S) கி.பி.1884ல் கட்டியது. பிற்காலத்தில் முதலாம் உலகப் போர் சமயத்தில் ஏற்காட்டில் சிறை வைக்கப்பட்ட ஜெர்மானிய போர்க் கைதிகள் இந்த தேவாலயத்திற்கு ஒரு ஜெர்மானிய பாணி மணிகோபுரத்தைக் கட்டிக் கொடுத்துள்ளார்கள். சங்கை கோபெட் கிரிகர்சன் ஐயர் (Rev.Kofoed Gregerson 1883-1890) சேர்வராயன் மலையின் மேற்கு சரிவின் கீழே உள்ள காடையாம்பட்டி என்ற இடத்தில் மலைவாழ் மக்கள் மத்தியில் ஊழியம் செய்யும்படி அந்த பகுதிகளில் டேனீஸ் மிஷன் குடியிருப்புகளை (Danish Missionary Settlement ) உருவாக்கினார். அந்த பகுதி சேலத்திலிருந்து சென்னை செல்லும் இருப்புப் பாதை மார்க்கத்தின் காடையாம்பட்டி இரயில் நிலையம் அருகில் இருந்தது. நாளடைவில் அந்த இரயில் நிலையம் அருகில் சிறந்து விளங்கிய டேனீஸ் மிஷன் குடியிருப்பு மற்றும் ஊழிய விஸ்தரிப்புகளால் டேனீஸ்பேட்டை இரயில் நிலையம் என்ற பெயர்பெற்றது. சேலம் மாவட்டத்தில் டேனீஸ்பேட்டை (Danishpet) என்ற ஊரும் உருவாகி சிறப்புப் பெற்றது. சங்கை மார்ட்டென் ஆன்டர்சன் (Rev.Morten Andersen 1890-1931) 1903 ஆம் ஆண்டு அங்கு ஒரு ஆலயத்தைக் கட்டினார். பின்னர் 1919ல் புதிய ஆலயம் ஆண்டர்சன் ஐயரின் மறைவிற்கு பின் இந்த ஆலயம் **'ஆண்டர்சன் நினைவு ஆலயம்'** என பெயர் பெற்றது. இந்த ஆலயமும் பணித்தளமும் 1947ல் தென்னிந்திய திருச்சபைக்கு ஒப்படைக்கப்பட்டது. இன்று இந்த ஆலயம் CSI ஆண்டர்சன் நினைவாலயம், (CSI Andersen Memorial Church) டேனீஸ் பேட்டை, சேலம் என்று அழைக்கப்படுகிறது. இவைகளின் நீட்சியாக கடந்த 15-8-2018ல் சேலம் மாநகர் மணக்காடு பகுதியில் ஆற்காடு லுத்தரன் தேவாலயம் (ALC Good Shepherd Church, manakadu, Salem) மக்கள் இறை வழிபாட்டிற்காக பிரதிஷ்டை செய்யப்பட்டு திறக்கப்பட்டது.

**சேலத்தில் லண்டன் மிஷனெரி சங்கத்தின் இறைபணி மற்றும் கல்வி பங்களிப்புகள்:**

சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் துவக்கிய ஆரம்ப கல்வி முயற்சிகள் விளைவாக சேலம் நகரில் உருவான அனைவருக்குமான பள்ளிகள் மற்றும் பெண் பிள்ளைகளுக்கான பள்ளி திருமதி.எலிசா ஸ்டெப்பி அம்மையாரின் தீவிர முயற்சியின் பயனாய் உருவானது. அதுவே சேலத்தின் பெண்கள் கல்விக்கான முதல் பள்ளிக்கூடம் (1829) ஆனால் அம்மையாரின் திடீர் மரணத்தால் பணிகள் முடங்கின. அடுத்து பொறுப்பேற்ற சங்கை வால்டன் ஐயர் முயற்சியால் பெண்களுக்கான பள்ளி மிஷன் வளாகத்தில் உருவானது. (Female School for Girls - 1832) மேலும் முதன்முறையாக பெரியவர்களுக்கான பள்ளியையும் (Adult School) அவர் துவக்கினார். ஆண், பெண் இருபாலரும் இங்கே பயின்று பயன்பெற்றனர்.

சங்கை J.M.லெக்லர் ஐயர் மிஷன் வளாகத்தில் ஒரு பெரிய தேவாலயத்தைக் கட்டினார். சேலம் தொழிற்பயிற்சி பயிலக மாணவர்களும், ஆசிரியர்களும், மற்றும் சபை மக்களும் இணைந்து கட்டினர். முற்றிலும் இந்திய பொருட்களைக் கொண்டு இந்திய கரங்களால் கட்டப்பட்ட சுதேசி ஆலயம் இது(1856).

தருமபுரியில் மிஷன் பணித்தளத்தில் வால்டன் ஐயர் காலத்தில் (1832-1839) ஒரு பள்ளிக்கூடம் திறக்கப்பட்டது. சேலம் மாவட்டம் முழுமைக்குமான கண்ணோட்டம் லெக்லர் ஐயர் காலத்தில் முன்னெடுக்கப்பட்டது. ஆத்தூரில் சங்கை லெக்லர் ஐயர் முயற்சியால் கிறிஸ்தவ கிராமங்கள் உருவாயின. முதலூர், அருளூர், சமாதானபுரம் என்பவையே அவைகள். கோனேரிப்பட்டி, மற்றும் செந்தாரப்பட்டி ஆகிய பகுதிகளில் சபைகள் நன்கு வளர்ச்சிடைந்திருந்தது. 1843ல் சேலம் மாவட்டத்தில் 22 லண்டன் மிஷன் பள்ளிகள் இருந்தன. இவைகளில் சேலம் டவுன் பகுதிகளில் மட்டும் 7 பள்ளிகள் செயல்பட்டது.

சேலம் அஸ்தம்பட்டி பகுதியில் ஒரு தேவாலயம், அடைக்கல நகர் என்ற கிறிஸ்தவ குடியிருப்பு (1861). இதுதான் இன்றைய CSI அஸ்தம்பட்டி இம்மானுவேல் ஆலயத்தின் துவக்கம். சேலம் ஜங்ஷன் சூரமங்கலம் பகுதியில் கிறிஸ்தவ சபை (1846), பள்ளிக்கூடம் உருவானது. 1866ல் தேவாலயமும், பள்ளி கட்டிடங்களும் கட்டப்பட்டது. இது தான் இன்றைய CSI தூய திரித்துவ ஆலயத்தின் ஆரம்பம்.

1875ல் சேலம் நகரின் மையத்தில் ஆங்கிலேயர்களுக்கான ஆலயம் கட்டப்பட்டது. இது தான் இன்றைய சேலம் கோட்டை CSI கிறிஸ்துநாதர் ஆலயம்.அப்பொழுது Society for the Probag-





ation of Gospel - S.P.G என்ற மிஷன் ஸ்தாபனம் தமிழ் கிறிஸ்தவர்களைப் பராமரித்தது.

கி.பி.1877 சேலம் மிஷன் வளாகத்தில் உயர்நிலைப்பள்ளி துவக்கப்பட்டது. அன்றைய புகழ்பெற்ற லண்டன் உயர்நிலைப்பள்ளி (Salem London Mission High School)இது. இன்று இந்தப் பள்ளி சேலம் CSI ஆண்கள் மேனிலைப் பள்ளி, கோட்டை, சேலம் -1, என்று அழைக்கப்படுகிறது.

கி.பி.1891ல் ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த பெண் நற்செய்திப் பணியாளர் செல்வி லோயிஸ் அன்லி காக்ஸ் அம்மையார் சேலம் வந்து பொன்னம்மா பேட்டை,அம்மாபேட்டை, குகை, மற்றும் கிச்சிப்பாளையம் ஆகிய நான்கு நகரத்தின் முக்கிய இடங்களில் பெண்களுக்கான கல்விநிலையங்களைத் துவக்கினார். இவரைத் தொடர்ந்து சேலம் வந்த செல்வி அன்னிகிரவுச், மற்றும் செல்வி மார்கரெட் லாட்ஜ் ஆகியோர் சேலம் அஸ்தம்பட்டியில் நிலம் வாங்கி அங்கே பெண்களுக்கான கல்வி இயக்கத்தைத் துவக்கினர். பெண்களுக்கான பள்ளி, தங்குமிடம் ஆகியவை அடங்கும். இவர்களுக்கு உதவியாக செல்வி மம்மரி என்பவரும் பின்நாளில் இவர்களுடன் இணைந்து கொண்டார். ஆஸ்திரேலிய உதவி சங்கம் (Australian Auxillary Society) இந்த பெண் கல்வி முயற்சிகளுக்கான திட்டங்களையும், நிதி உதவிகளையும், வழங்கி வந்தது. 1926ல் பெண்களுக்கான ஆசிரியர் பயிற்சி பயிலகத்தை சேலத்தில் செல்வி ஸ்டேனியன் (Miss.Stanyon) என்பவர் துவக்கினார். இந்த அஸ்தம்பட்டி ஹோபார்ட் வளாகத்தில் அது 1931ல் புதிய கட்டிடங்களுடன் துவக்கப்பட்டது. இதற்கான அடிக்கல் நாட்டு விழாவில் அப்போதைய சென்னை மாகாண ஆளுநர் பிரெட்ரிக் ஸ்டேன்லி கலந்து கொள்ள, அவர் மனைவி லேடி பேட்ரிக்ஸ் ஸ்டேன்லி அம்மையார் அஸ்திபார கல்லைப் பதித்தார். இன்றைக்கும் இந்த வளாகம் சேலம் CSI ஹோபார்ட் பெண்கள் பள்ளி மற்றும் ஆசிரியர் பயிற்சி பயிலகமாக தொடர்கிறது.

**வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த சேலம் மிஷன்:**

சங்கை J.M.லெக்லர் ஐயர் சேலம் மிஷன் இயக்கங்களின் தந்தை (Father of Salem Mission) என்றும் அழைக்கப்படுகிறார். அவர்காலத்தில் (1840-1861) தான் சேலம் மாவட்டத்தின் அனைத்துப் பகுதிகளிலும் திருச்சபைகள் நிறுவப்பட்டது. சேலம் நகரம் தொடங்கி அதன் தாலுக்காக்கள், கிராமங்கள் என்று திருச்சபைகளும், பள்ளிக்கூடங்களும் தொடங்கப்பட்டது. சேலம் நகரில் லெக்லர் ஐயர் கட்டிய தேவாலயம் அப்பொழுது மத்திய ஆலயம் (Central Church)என அழைக்கப்பட்டது. (இந்த ஆலயம் CSI லெக்லர் நினைவாலயம் கோட்டை, சேலம் என்று அழைக்கப்படுகிறது). வருடத்திற்கு ஒருமுறை சங்கமம் (Annual Sangam) என்ற விழாவில் சேலத்திலுள்ள அனைத்து தாலுக்கா, மற்றும் கிராமங்களிலுள்ள சபைகள் சேலம் மத்திய ஆலய வளாகத்தில் கூடுவது வழக்கமாக இருந்துள்ளது. தாய் திருச்சபையில் மாவட்டம் முழுவதிலுமிருந்து (District Congregations) வந்த பல்வேறு சபைகளின் கூடுகை சிறப்பாக நடக்கும்.

ஆத்தூர் பகுதியில் லெக்லர் ஐயர் அதிகமாக தனது கவனத்தைச் செலுத்தினார். ஆத்தூர் தாலுக்காவில் கிறிஸ்தவ கிராமத்திற்கான ஒரு நிலத்தை அரசாங்கத்திடமிருந்து அவர் வாங்கினார். கோனேரிப்பட்டியில் பள்ளிக்கூடமும் திருச்சபையும் (1851), அதே போல செந்தாரப்பட்டியிலும் (1852), உருவானது. பின்னர் 1877ல் சங்கை மோரிஸ் பிலிப்ஸ் ஐயர் செந்தாரப்பட்டியில் ஒரு ஆலயத்தைக் கட்டினார். பிற்காலங்களில் ஆத்தூர் தாலுக்கா மிஷன் நிர்வாக வசதிக்காக. நான்கு பகுதிகளாக பிரிக்கப்பட்டது. ஆத்தூர் மற்றும் நரசிங்கபுரம், முதலூர், செந்தாரப்பட்டி, கோனேரிப்பட்டி மற்றும் அருகில் உள்ள கிராமங்கள், கீரிப்பட்டி என்பதே திருப்பதூரும் சேலம் மிஷனுக்கு உட்பட்டு இருந்தது. அங்கு லண்டன் மிஷன் சிற்றாலம், கிருஷ்ணகிரியில் எலத்தகிரி, சங்ககிரியில் நத்தானியேல் ஞாபகார்த்த ஆலயம் (1882) இடைப்பாடி, குள்ளம்பட்டி, மற்றும் கச்சுப்பள்ளி, அங்கே சபை வளர்ச்சி (1925) இடைப்பாடியிலிருக்கும் உபதேசியாரின் மேற்பார்வையில் நிர்வாகம். மங்கலம் கிராம திருச்சபை (1926), இதுபோலவே ஆத்தூர் பகுதிகளில் முத்தம்பட்டி மற்றும் சுக்கம்பட்டி கிராம திருச்சபைகள். இப்படியாக அன்று வரலாற்றுச் சிறப்பு பெற்ற சேலம் மிஷன் வளர்ச்சிப் பாதையில் தொடர்ந்து முன்னேறி செல்கிறது.

**முடிவுரை**

கட்டுரையில் ஒருங்கிணைந்த சேலம் பகுதிகளில் கிறிஸ்தவ மிஷன் இயக்கங்களின் - கத்தோலிக்க, லண்டன் மிஷன், மற்றும் இதர மிஷன் இயக்கங்களின் பங்கையும் பங்களிப்புகளையும் விரைவாக ஒரு வழிப்போக்கனின் தொகுப்பாக தந்துள்ளேன். ஏறத்தாழ ஒரு 400 ஆண்டுகால சரித்திரத்தை அங்கொன்றும் இங்கொன்றுமாக முக்கிய மிஷன் இயக்க நிகழ்வுகளை, சாதனையாய் நிற்பவைகளை, மட்டும் கோடிட்டு காட்டியுள்ளேன்.

இதில் முக்கியமாக இன்று சேலம் லண்டன் மிஷன் உருவாகி 200 ஆண்டுகளை (Bicentenary) நெருங்கும் காலகட்டத்தில் நாம் இருக்கிறோம். அன்று 1927ஆம் ஆண்டு சேலம் மிஷன் துவக்கப்பட்டு நூறாண்டுகளின் நிறைவு விழா (Centenary) சிறப்பாக அனுசரிக்கப்பட்டதாக சங்கை T.C.விட்னி ஐயர் தனது ' 'A Hundred Years of Salem Mission History -1936' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். அதில் என்னைக் கவர்ந்த ஒரு நிகழ்வை இங்கே குறிப்பிடவேண்டும். சேலம் மிஷன் நூற்றாண்டு சிறப்பு ஆராதனைகள் முடிந்த பிறகு சில விசுவாசிகள் சேலம் ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்திற்குச் சென்று அங்கே சேலம் மண்ணில் விதைக்கப்பட்ட முதல் மிஷனெரிகளின் கல்லறைகளின் அருகில் ஒரு நினைவு ஆராதனையை நடத்தினார்களாம். அப்பொழுது ஒருவர் வெண்மை நிற மலர்களை அந்த முதல் மிஷனெரிகளின் கல்லறைகளின் மீது வைத்து அஞ்சலி செலுத்தினாராம். படுவேதனைகளின் மத்தியில் மெதுவாக முன்னெடுக்கப்பட்ட முயற்சிகளின் மகத்தான வெற்றியே இந்த மிஷன் இயக்கங்களின் பங்களிப்புகள்.

J **பர்னபாஸ்**

**சேலம் வரலாற்றுச் சங்கம்**

கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் மாத இதழை தமிழ் வரலாற்று அறிஞர்களை சந்தித்து கொடுத்த பொழுது எடுத்த படங்கள்



திருச்சி திருமண்டல முன்னாள் குருவானவர் மற்றும் ராக்லாண்ட் ஜெபராஜ் அண்ணன் அவர்களுடன்



மெஞ்ஞானபுரம் ஜெய போஸ் அண்ணன் அவர்களுடன்



சேலம் வரலாற்று சங்க பொதுச் செயலாளர் திரு பர்ணபாஸ் அவர்களுடன்



பேராசிரியர் மைக்கேல் பாரடே அவர்களுடன்



அமல்ராஜ் அண்ணன் அவர்களுடன்



வரலாற்று சங்க நண்பர் அவர்களுடன்



CCRD பாண்டிதுரை பாஸ்கர தாஸ் ஐயா அவர்களுடன்



பிரதீப் ஜோயல் அவர்களுடன்



திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக வெளியிடப்படும் மாத ஆய்விதழ். தொடர்புக்கு +91 91767 80001